


"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—(திருக்குறள்.)

மலர் 4. | 1923ஆ மேமீ | இதழ் 9.

## தெய்வ வழிபாடு.

எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே.

## ஸ்ரீ ஹரதத்தாசாரிய சுவாமிகள் சரித்திரம்.

முன்னோர்கால் பிருகுமுனிவர் திருமாலை சபித்தபோது நடுநடுங்கி, உருத்திரரும், சதாசிவரும், பூதகணங்கள் புடைசூழப்பெற்றவரும், தஞ்சமென்று காலில் விழுந்த சந்திரனை தன் சடாமகுடத்தி லணிந்தவரும், தன்னோடு முரண்டெழுந்த முயலகனை காலின்கீழமிழ்த்தினவரும், தேவமாதர் பொற்றாலி தனைக்காத்த தேவதேவரும் உமசகாயரும், பசுபதியுமாகிய பரமேஸ்வரரைத் தமது இருதய கமலத்திலே சிந்தித்து கலுழன்மீது ஆரோகணித்து, கந்தருவர் சதா சங்கீதம் பாடிக்கொண்டிருப்பதாயும் கின்னரர்களுக்கு உறைவிடமாயும், பல சிங்கார வனங்களை யுடையதாயும், சுவர்ணப் பிரகாச தோரணங்களை யுடைதாயுமிருக்கிற மந்தர மலையையடைந்து; ஓர் குகையை யணுகி தேகமாதியந்தமும் சிவபஸ்ப தூளிதராய் சடையையுடையராய் மேகலையுடையராய் அக்கினியைவளர்த்தி தினந்தோறும் மூன்று வேளைகளிலேயும் கிருச்சிர சாந்திராயண விரதாதிகளை யனுஷ்டித்து தேகத்தை வற்றச்செய்தும், வாயுபக்ஷணத்தால் சிலகால் அருந்தவம் புரிந்தும் வந்தனர்.

இவ்வாறிருக்கையில் கைலயங்கிரியின் வாயிற்றலைவரும் அயோநிசரும், சாலங்காயண கோத்திரருமாகிய நந்தியெம்பெருமான், கடுந்த

வம் செய்யும் விஷ்ணுவைப் பார்த்துவந்து, சிவபெருமானை நமஸ்கரித்து சுவாமி! "விஷ்ணுவானவர் தங்கள் ஸ்தானத்திலே மனதில் மிகவும் கவலை கொண்டவராய் பல வ்ருஷங்களாக உக்கிரமான தபசு செய்கிறார்" என்று விண்ணப்பஞ் செய்தார். உடனே உள்ள முவந்தவராய் உமாதேவியுடன் இடபாரூடராய் தமது பிரதம கணங்கள் புடைசூழ விஷ்ணுவுக்கெதிரே யெழுந்தருளி "குழந்தையே! உமது தபசால் மகிழ்தேம். எமது பக்தருக்குசெய்த தீங்கு எமக்குச் செய்ததுபோலாயிற்று. இப்போது நீசெய்த தவத்தால் அத்தீங்கு நீங்கிப்போயிற்று. எனது அன்பராகிய பிருகுவுக்கு செய்த துரோகம் இருந்தபடியே யிருக்கிறது. அது நீங்கும் உபாயஞ் சொல்லுகிறேன் கேள். பூலோகத்திலே காவேரிக்கு வடகரையிலே கஞ்சாபுரமெனப் பெயரிய க்ஷேத்திரம் ஒன்றுளது. நீ ஆங்குள்ள கஞ்சாபுரீசுரரைக் குறித்து நெடுங்காலம்தவமியற்றுவையேல்உன்சாபம் நீங்கும்" என்று அந்தர்த்தானமாயினர்.

விஷ்ணுவானவர் சிவபிரான் கூறியவாறு திரிகாலமும் கஞ்சாபுரீசுரரை வணங்கி பஞ்சயக்ஞங்களையும் (அக்கினிகருமம், தேவபூசை, பிதிர்பூசை, விருந்தோம்பல் வேதாத்தியானம்) செய்தும், கிரீஷ்ம காலத்தில் பஞ்சாக்கினிமத்தியில் நிற்பவராயும், சரத்காலத்திலே (மழை காலத்திலே) வெளியிலே நிற்பவராயும், ஏமந்த காலத்திலே (பனிக்காலத்திலே) காவேரி நதியிலே கழுத்தளவு சலத்திலே நிற்பவராயும், இரண்டு கண்களையும் நிராலம்பமாக (ஆதாரமில்லாமல்) உயர்த்தி உச்சுவாசமின்றி அவனருள் பெருமாறு கடுந்தவசு புரியுங்கால் கெடுங்காலம் சென்றுவிட்டது. அவரது பிரமரந்திரத்தி (உச்சித்துவாரத்தி) னின்றும் உண்டாகிய தபாக்கினி, மூன்று லோகங்களையும் சுடத்தொடங்கியது. அதனால் மனிதர் தேவர் அசுரராயினோர் யாவரும் ஒருங்குகூடி உஷ்ணம் பொறுக்கமாட்டாது; பிரமனையடைய அவர் அனைவருடன் ஸ்ரீ கைலாயத்திற் கெழுந்தருளி பார்வதிபதியாகிய எமது சிவபரஞ்சுடரை பன்முறையும் நமஸ்கரித்து "சுவாமி! விண்டுவானவர் தேவரீரைக் குறித்துசெய்யும் கடுந்தவத்தால் எழுந்த தபாக்னியால் தகிக்கப்பட்டு இவ்விடமடைந்தோம் எங்களை ரக்ஷிக்க" என்றனர். அவர்கள் விண்ணப்பத்திற்கிரங்கிய மழவிடையார், "விஷ்ணுவுக் கெதிர்தோன்றி விஷ்ணுவே எழுந்திரு, உன் தபசினலே பிரீதியடைந்தேம்" என்றனர். உடனே விஷ்ணுவானவர் சிவபிரானை பலவகையாலும் வணங்கி, சுவாமி பிருகுமுனிவர் சாபத்தால் கஷ்டமடைந்தேன். அன்றியும் என்னை யுபாசிக்கும் ஏகதண்டியும் திரிதண்டியுமாகிய இருசந்நியாசிகளை தரிசித்தவர்கள் பாஷாண்டிகளாய் போமாறு சபித்தார். ஆதலால் அது நீங்குமாறு அருள்புரிய வேண்டுமென பிரார்த்திக்க, சிவபிரான் அருகேயழைத்து நீயஞ்சற்க, எனது பக்தனுடைய சாபத்தைக் கடத்தல் யாவர்க்கு மரிது. ஆயினும் அநேக சென்மம் எய்தாது. மற்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், தன்வந்திரி, மோகினி, நாரதர், பிருகு, சனற்குமாரர், விராட்டு என்னும் இப்பத்தவதாரமும் உனக்கு ஆவிர்ப்பாவமாகுக. பார்க்கவர், இராமர், பரசுராமர், கிருஷ்ணர், வியாசர், பலபத்திரர், கபிலர், நரநாராயணர், யஞ்ஞர், வாமனர், தத்தாத்ரேயர், விருஷபர், புத்தர், கற்கி, சுதர்சனர் என்னும் இப்பதினைந்தவதாரமும் உனக்கு யோனிசமாகுக. அம்முனிவர் வாக்குப்படி தடையின்றி நிகழும் எனக்கூறி பின்னரும் கூறுகின்றார்.

"எனது ஸ்தானத்திலுள்ள சாதுக்களை வெறுப்பவர் கீழோராவர். எனது அடியார்களை காப்பவர்கள் எனது அன்புக்கு மிகசொந்தமுடையராவர். பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சன்னியாசி என்னும் நான்கு ஆச்சிரமத்தாரையும், நான்கு வருணத்தாரையும் காரணமின்றி தூஷிக்கின்றவர்கள் நிச்சயமாகவே பாஷாண்டராவார்கள்" என்றனர்.

இவற்றைக்கேட்ட திருமால், சுவாமி! நான்காச்சிரமங்களிலும் உமது பக்தர்கள் இருக்கின்றார்கள் என்றீர் அவரது இலக்ஷணமென்னே? அவரது பெருமை என்னே? என்று பிரார்த்திக்க இந்நான்காச்சிரமங்களுக்கும் தனிதனி பிரவர்த்தகர்கள் ததீசி, கௌதமர், அகஸ்தியர், துருவாசர் என்னும் நான்கு இருடிகளே யாவார். ததீசி முனிவர் பிரமசரியத்தை நிறுத்தினர். கௌதம முனிவர் கிருகஸ்தாஸ்ரமத்தை நாட்டினர். அகஸ்தியர் வானப்ரஸ்தாச்சிரமத்தை நிறுவினர். துர்வாச முனிவர் சன்னியாச ஆச்சிரமத்தை நிலைப்பித்தார். மும்மலங்களை நீக்குவதும் சிவசம்பந்தமுள்ளதும் மேலானதுமாகிய தீக்ஷையைத் தவிர மனிதர்களுக்கு எந்த ஆசிரமத்திலிருந்தாலும் உத்கிருஷ்டமில்லை. மூன்று காலங்களிலும் நீராடி பிச்சையெடுத்துண்டு கௌபீனந்தரித்து மான்தோல் தண்டம் இவைகளைத் தாங்கி, சிவாக்கினி பூஜைசெய்து; வேதாத்தியாயனம் பண்ணி குடுமியோடு இருப்பவன் பிரமசாரி. விதித்த நாட்களிலே மனைவியைக்கலந்து, தெய்வம், விருந்து, தென்புலத்தாரிவர்களையோம்பி எவர்க்கும் கருணைபாலிப்பவன் கிரகஸ்தன். சடையையுடையனாய் வனவாசஞ்செய்து மனைவியோடுகூடி வேதாத்தியாயனம் பண்ணி காய்கனி கிழங்குகளை யருந்தி மரவுரி உடுத்து வாசஞ்செய்பவன் வானப்பிரஸ்தன். திரிகாலமும் ஸ்நானஞ்செய்து கௌபீனதாரியாய் சிவத் தியானஞ்செய்து தண்டம் விபூதி சடை இவைகளை யுடையவனாய், அக்கினியையும், மனைவியையும், சர்வ கர்மங்களையும், அபோச்சிய அன்னத்தையும் தவிர்த்து ஐயமேற்று, கோத்திரம் சந்தானம் இவற்றை விடுத்து, சதா சிவத்தியானஞ்செய்து சிவசாயுச்ய மடைபவன் சன்னியாசி. ஹே கேசவ! சமுசார சாகரத்தைக் கடப்பதற்கு ஓர் தெப்பத்தைக் காட்டுகிறேன். கவனிப்பாயாக. ஒருவன் பைத்தியத்திலேனும், மோகத்திலேனும், நித்திரையிலேனும் எத்துஷ்டனாயினும் "சிவ" என்னும் இரண்டெழுத்தைச் சிந்தைசெய்வானாயின் அவனை எம்மைப்போல குருவாக எண்ணுதி. ருத்திர சம்பு மகாதேவ சர்வஞ்ஞ சங்கர ஸ்ரீவாமதேவ ஸ்ரீகண்ட என்னும் எமது நாமங்களைச் சொல்லுபவன் எவனோ அவனை எம்மன்பனாக மதிப்பாயாக.

பிருகு முனிவர் எனதன்பராதலின் அச்சாபம் உமக்கெய்தும். இந்த அவதாரம் லோகோபகாரமாயிருக்கும். கௌதமர் ததீசி, கண்ணுவர் சியவனர் பிரமா நந்தி என்னும் எட்டுமுனிவர்களால் ஒவ்வோர் காரணத்தால் சபிக்கப்பட்ட பிராமணர்களுக்குள்ளே காசிபகோத்திரத்திலே எக்காலமும் வேதநிந்தை செய்பவரும், விபூதி ருத்ராக்ஷங்களை நிந்திப்பவரும், எம்மை நிந்திப்பவரும், நமது பக்தர்களை நிந்திப்பவருமாகிய வாசுதேவர் என்னும் பெயரோடு இக்கலியுகத்தில் ஒருவர் பிறப்பார். அவர் பாஞ்சராத்திரிகளுக்கு தேசிகராவார். அவர் உன்னை சுதனாக பெற அருந்தவமியற்றுவார். அப்போது நீ அவருக்குப் புதல்வனாய்த்தோன்றி எம்மை சிறுபிள்ளை விளையாட்டாய் பூசித்து வரும்போது, யாம் உமக்கு ஐந்தாவது வயதிலே சகல சாத்திரங்களையும் அனுக்கிரகித்து, இறுதியிலே எமது சாயுச்ய பதவியையும் அருளுவேம். உன்னுடைய அவதாரங்களை ஜனங்கள் பூசிப்பார்கள். அப்படி பூசிப்பவர் உனது பதத்தை யடைவார்கள்'' என்றனர். இவற்றைக்கேட்டு, "மகாதேவரே! சந்திர சேகரரே! கஞ்சாபுரத்தில் உம்மை பூசித்திருக்குங்கால் என் மனோபீஷ்டமெல்லாம்முற்றுமாறுவரம்வேண்ட'' அவ்வாறே தந்து மறைந்தருளினர். விண்டுவும் தம்மிருப்பிடஞ் சேர்ந்தனர்.

ம. மாசிலாமணி கிராமணி.

(இன்னும் வரும்.)

# சிவஞானபோத முதனூலாராய்ச்சி.

(முன்றொடர்ச்சி.)

(திரு. மா. சாம்பசிவம் பிள்ளை, திரிசிராப்பள்ளி.)

IIII. உமாபதிசிவம் தாமருளிய சிவப்பிரகாச மெனும் நூலில், நூல்மரபு கூறிய செய்யுளில், "தெரித்த குரு முதல்வருயர் சிவஞான போதஞ் செப்பினர். பின்பவர் புதல்வர் சிவஞான சித்தி விரித்தனர்" எனக் கூறியிருப்பதை நோக்குங்கால் தம் மரபின் முதற் குரவராகிய மெய்கண்ட தேவரே, சிவஞான போதத்தை யருளினரென்று கூறியதாகச் சொல்ல வேண்டி வருமேயன்றி 12- சூத்திரமொழிந்த மற்றவை களை மட்டு மருளினரென்று சொல்ல வாரா. சிவப்பிரகாச நூலுக்கு மதுரைச் சிவப்பிரகாசர் இன்றைக்குச் சுமார் 430-வருடங்களுக்கு முன் அதாவது உமாபதிசிவ மெழுந்தருளியிருந்த சுமார் 175-வருஷங்கட்குப் பின் உரையியற்றியுள்ளார். அவ்வுரையில் இச் செய்யுளுக்கு மூலக் கிரந்தம் பனிரெண்டினுமுள்ள அர்த்தத்தைத் தமிழாகப் பனிரெண்டு சூத்திரமாக விரித்து அந்த நூலின் பெயராலே சிவஞான போதமென்று செய்தருளினரென வெழுதியிருக்கிறது. உமாபதி சிவத்துக்குப் பின்னர் ஜீவதசையிலிருந்த மதுரைச் சிவப்பிரகாசரிவ்வாறெழுதி யிருப்பதற்கு மிகுதியான கௌரவங் கொடுக்க வேண்டும்.

V. திராவிட மகா பாஷ்யகர்த்தராகிய சிவ ஞான முனிவர் தாமியற்றிய சிவஞானபோதச் சிற்றுரையில் மெய்கண்ட தேவரைத் துதித்தருளிய செய்யுள் வருமாறு:— "சிறியவாடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்-கறிவு நூல்களின் முடி பெலாமகத் தடக்கியதோர், நெறியினீடிய நிகழ் சிவஞானபோதத்தைக்-குறிய தீந்தமிழானுரை குரவனைப் பணிவாம்" என்பதே. இச்செய்யுளாலும் சிவஞானபோதப் பனிரெண்டு சூத்திரத்தைத் தமிழானுரைத்தவர் மெய்கண்ட தேவரென்றே வெள்ளிடைமலைபோல விளங்குகிறது. தீந்தமிழானுரைத்தாரெனவே, தமிழானுரைப்பதற்கு முன்னர் வேறுபாடையி லிருந்ததாகவே கொள்ளக் கிடக்கிறது.

VI. நிரம்பவழகிய தேசிகரியற்றிய சேதுப்புராணம் கடவுள் வாழ்த்தில் "அல்லாத பாசமையத்தலகைத்தேர் விண்டகல வகல்புனற் பெண்ணை வபல்சூழ் வெண்ணெய்ப்-பொல்லாத விபமுகத்துப் புத்தேடன்பாற் புனிதசிவாகமம் பொருண்மை பொருந்தவாய்ந்து, நில்லாத நிலையிது மற்றென்று மொன்றாய் நிற்குநிலையிது வென மெய்ந்நெறி தேர்ந்தியாரும், வெல்லாத சிவஞானபோதஞ் சொன்ன மெய்கண்டான் சரணமுடி மீதுகொள்வோம்" என்பதனாலும் சிவஞான போதமெனும் நூலை யியற்றினவர் மெய்கண்டாரெனவே விளங்குகிறது. சிவஞான போதஞ் சொன்னாரென்றால் 12-சூத்திரம் வார்த்திகப்பொழிப்பு, உதாரணவெண்பாக்கள் இவைகளடங்கிய சிவஞானபோதமெனப்பொருள்கொள்ளவேண்டுமே யொழிய ஒன்றைவிட்டு ஒன்றைக் கொள்வது பொருத்தமிலது. இதுகாறும் நூலினதுபிரமாணத்தால் காட்டப்பட்டது. யுக்திவகையா யொன்றுரைக்கிறேன். நவீனக் கொள்கையார் கூற்றுப்படி தமிழ்ச் சிவஞானபோதம் சீகண்டருத்திரரால் நந்தி யெம்பெருமானுக்குபதேசிக்கப்பட்டிருந்தால் சீகண்டர் மெய்கண்டாரைவிட எத்தனை திறத்திலோ சிறப்புடையவராயிருக்கையில் தமிழ்ச் சிவஞானபோதத்துக்குச் சிறப்புப்பாயிர மியற்றினோர், அப்பாயிரத்திலும், மெய்கண்டார் முதல் மாணக்கர் அருணந்திதேவர் ஆதியோரியற்றிய நூல்களின் நூல் வழிச் செய்யுட்களிலும் சிவஞானபோத

முரைத்தோன் ஸ்ரீகண்டன், ஸ்ரீகண்டர் நூல், ஸ்ரீகண்டர் தமிழ், ஸ்ரீகண்டர் சிவஞானபோதஞ் செப்பினர் என்றல்லவா கூறியிருக்கவேண்டும் அப்படிக்கன்றி சிவஞானபோத முரைத்தோன் மெய்கண்ட தேவன், மெய்கண்டான் செய்த தமிழ்; மெய்கண்டா நூல், குரு முதல்வருயர் சிவஞானபோதஞ் செப்பினர், என ஏன் கூற வேண்டும்? இன்னமுஞ் சைவ சித்தாந்த நூல்களின் உரையாசிரியர் பலராலும் வடமொழிச் சிவஞானபோதத்தை மெய்கண்ட தேவர் தமிழில் மொழி பெயர்த்தாரெனவே எழுதப்பட்டிருக்கிறது.

VII. மற்றுமோர் நியாயமுளது, சைவசித்தாந்த மரபுக்குரிய திருவாவடுதுறை யென்னுஞ் சைவாதீனம் இற்றைக்குச் சுமார் 500-ஆண்டுகட்கு முன் தோன்றியது, இவ்வாதீனம் மெய்கண்டார் சந்ததி. "மெய்கண்டான் சந்ததிக்கோர் மெஞ்ஞானபாநுவாகிக் குயிலாரும் பொழிற்றிருவாவடுதுறை வாழ்குரு நமச்சிவாய தேவன், சைலாதி மரபுடையான் திருமரபு நீடூழிதழைகமாதோ" என முதற் குரவர் நமச்சிவாய மூர்த்திகளை இவ்வாதீன பரம்பரையார் துதித்திருப்பதினாலும் இவ்வுண்மை விளங்கும் மெய்கண்டார் ஆதிய சந்தான குரவர் நால்வர்களுடைய குரு மூர்த்தங்களுன்கும் திருவெண்ணைநல்லூர், திருத்துரையூர், சிதம்பரம் இத்தலங்களிலிருந்து விளங்கி வருவதில் இந்தக் குரு மூர்த்த ஆலயங்களும் அவைகளுக்கு ஏற்பட்ட பண்டையக் காலத்திய வருவாய்களும் இத்திருவாவடுதுறை ஆதீனத்தார் ஆளுகைக் குள்ளேயே தொன்றுதொட்டு இருந்து அக்குரு மூர்த்தங்களுக்கு நித்திய நைமித்திக ஆராதனைகளும் நடத்தப்பட்டு வருகின்றன. இந்த ஆதீனத்தாரும் பண்டைய காலந்தொட்டே சிவஞானபோதம் தமிழ்ப் பனிரெண்டு சூத்திரமும் மெய்கண்ட தேவரால் வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு அதற்கு வார்த்திகப் பொழிப்பும் உதாரண வெண்பாக்களும் அருளப்பட்டதெனவும் சென்ற 500 ஆண்டுகளாகவே கைக்கொண்டும் வருகின்றார்கள். சூரியனார் கோயில் முதலிய மற்றைச் சைவ ஆதீனத்தார்களும் இவ்வாறே கடைப்பிடித்திருக்கின்றார்கள். இதுகாறுங் காட்டியவற்றால் தமிழ்ச் சிவஞானபோதம் வடமொழியின் மொழிபெயர்ப்பே யெனக் கொள்ளக் கிடக்கிறது.

---

## ஹேமகூடோபாக்கியானம்.

(முன்றொடர்ச்சி.)

(ம. மாசிலாமணி கிராமணி, தண்டையார்பேட்டை, சென்னை.)

---

இவ்வாறு வேட்டையாடிக் கொண்டிருக்கையில் திடீரென கல்மழையுடன் ஒரு கொடூரமான புயல் அடிக்க ஆரம்பித்தது. அதனாலே அமாவாசை நிசியைப்போல புழுதியால் ஆகாய முழுமையும் நிறைந்தது. எந்தவிடத்திலும் இருள் பரவியபடியால் அருகிலுள்ள மரங்களாவது பாறையாவது மனிதராவதுதெரியவில்லை. அந்தகாரம் சூழப்பெற்ற குன்றுகளில் மேடு பள்ளம் இவையெனத் தெரியவில்லை. கல்மாரியினால் தேகங்கள் நொந்து சேனைகள் நாலாதிசைகளிலும் ஓடத்தலைப்பட்டன. அந்தோபாபம்! அவர்களால் நிலைத்துநிற்க முடியவில்லை. சிலர் மரங்களில் ஏறிக்கொண்டனர். சிலர் பள்ளங்களில் விழுந்தும் மேட்டில் இடரியும் குகைகளில் ஒளித்தனர். வஞ்சனை நிறைந்த மாந்தரின் நெஞ்சம்போன்ற அவ்விருளில், இராஜ

குமாரர்களிருவரும் தங்கள் குதிரைகளின்மீது ஏறி நெடுந்தூரஞ் சென்றார்கள். இவர்களில் ஹேமசூடன் கதலிகர்ச்சூர விருக்ஷங்கள் நிறைந்ததும் மகாமனோரம்மிய மானதுமாகிய ஒரு வனத்தை யடைந்தான்.

அவ்வனமானது,

"கோங்கிள முலைகள் தாங்கிக்
கொடியிடை நடங்கக் கூவு
மாங்குயிற் கிளவி தன்னால்
வருகென முகமன் கூறித்
தேங்கமழ் வனமான் புன்னைப்
பூம்பொரி சிதறிச் செவ்வி
தாங்குமென் றளிக்கை தன்னாற்
கனிதரத் தகவி கண்டான்."

அதாவது, தன் வரவைக்கண்ட வளவிலே ஸ்தனபாரத்தை பொறுக்க லாற்றாது இடையசையா நிற்க, அன்புக்கடையாளமாக நல்ல வார்த்தைசொல்லி மங்களத்தின் பொருட்டு பொரியிறைத்து காணிக்கையாகக் கனிகொடுத்துக் காண்கிற ஒரு சுமங்கலைபோல, மேலே சொன்ன வனமானது கோங்கரும்புகளைத் தாங்கி கொடியசையாநிற்ப குயிற்சொற் களைக் காட்டி, புன்னை பூக்களையிறைத்து, தளிரிடைத் தொங்குகிற கனியைத் தருகின்றது போலத் தோன்றியது. இவ்வித அதிசுந்தரமான அவ்வனத்திலிருந்த ஆசிரமத்தில் தங்கத்தை உருக்கிவிட்டதுபோல தேகமுழுமையும் ஒளிவீசுகின்ற காந்தியையுடைய அதிரூபவதியாகிய ஒரு கன்னிகையைக் கண்டு,

"பூவும் பழுத்த செழுந்தீங்
கனியும் பொழியமுத
மேவுக் குடங்க ளிரண்டுடனே
யிரு மீனுங்கொண்டு
சேவுந் தழகர் திருவெங்கை
வாணர் சிலம்பின்மலர்
தூவும் பொழிலி லெதிர்ப்பட்ட
தாலொரு தூமணியே."

அதாவது, ஓர் தாமரைமலரும், செழுமையான கொவ்வைக் கனியும், அமிர்தம் நிறைந்த இரண்டு குடங்களும், இரு மீனுங்கொண்டு மலர்தூவும் இப்பொழிலின்கண் எதிர்ப்பட்டது என்னே! என ஆச்சரிய முற்றவனாய், இவ்விதம் நிற்கும் இம் மடமான்.

மண்ணோ விரைச்சந் தனவரை
யோமலர் மாளிகையோ
விண்ணோ வலைத்தண் புனலோ
பழமலை வெங்கையன்ன
பெண்ணோ டிருக்கும் பொழுதிளஞ்
சேவிற் பிறழுநெடுங்
கண்ணோ டிருக்கு முகம்போல்வ
தாங்கது கண்டிலமே.

பெண்ணோடிருக்கும் பொழுது கண்ணோடிருக்கும் முகம்போல் வதாகிய இடம். பூமியோ! (அவனிமங்கையோ) வாசனைபொருந்திய சந்தனமரம் நிறைந்த மலையோ! (வரையர மங்கையோ) தாமரையாகிய மாளிகையோ (திருமங்கையோ) வானலோகமோ! (தேவலோகத்தின்கண்வசிக்கும்மங்கையோ) அலையையுடைய நீரோ (நீரரமங்கையோ) இவள் இருப்பிடந்தானெங்கோ! என ஐயுற்றவனாகி அருகேசென்று உற்றுநோக்கி, ஓஹோ! இவளது பாதம் பூமியிற்படிகின்றது. நீலோற்பலம்போன்ற இரண்டு கண்களும் என்னை அழைப்பனபோல் இமைக்கின்றன. ஆகையால் தேவமகளல்லவென தெரிந்தோனாய், பின்னுஞ்சற்று அருகேநெருங்கி "நிர்மானுஷ்யமான இக்காட்டில் தனித்து நிற்கும் சுந்தரியே! நீயார் நீ யாருடைய புதல்வி, யாதுகாரணத்தினால் இவ்விடத்தில் ஏகாங்கியாயிருக்கிறாய்?" என்று வினவினான்.

இவ்விதம் கேட்கப்பட்ட அக்கன்னிகை மிகவும் மரியாதையுடன் "ஏஇராஜகுமாரா! இதோவிருக்கும் ஆசனத்தில் அமரும்; அதிதிகளை யாதரிப்பது தபசிகளுடைய தருமம்; மிகவும் பயங்கரமான புயலில் அடிபட்டதனால் அதிக சிரமத்தை யடைந்தவராக காணப்படுகிறது.

ஆகையால் இந்த கர்ச்சூரமரத்தி (பேரீச்சமரத்தி) ல் குதிரையைக் கட்டிவிட்டு சிறிது ஆறுதலடையுங்கள். பிறகு, என்னுடைய சரித்திரங்களைச் சொல்லக் கேட்பீர்" என்று கூறினள் அவ்வாறே சிறிதுநேரம் ஆயாசந்தீர உட்கார்ந்திருந்தான். இதற்குள் அக்கன்னிகை நல்ல பழங்களையும், அதிருசியுள்ள ஒருவகையான பழரசங்களையும் கொண்டுவந்து உணவு செய்வித்தாள். இவ்விதம் உண்டபின், அரசகுமாரனை நோக்கி அப்பெண் கூறுகின்றாள்.

"மேருவை யொத்துத் திரண்டபுஜத்தையுடைய அரசகுமரா! பூர்வம் திருப்பாற்கடல் கடைந்தபோது, விஷமெழ அதனால் தேவர்களும் மற்றையோரும் திசைகெட்டு ஓலமிட, அப்போது தன்னையடைந்தோரைக்காக்குநிமித்தம் உமையோடுந் திரிபவராகிய பரமபதியும் உமாபதியும், பசுபதியுமான சிவபெருமான், காருண்யத்தினால் விடத்தை பானஞ்செய்து தேவமாதர்களுக்கு மாங்கல்யபிச்சைகொடுத்து மற்றுமுள்ள அடியார்களுக்காக வரவு பார்த்திருக்கும் யாதொரு கர்த்தாவுண்டோ; அவருடைய அந்தமில் பதத்தை யாச்ரயித்தவரும், தமது தபோ மகிமையால் உலகத்தை ஜயித்தவரும் முனிசிரேட்டர்களால் பூஜிக்கப்பட்டவருமான வியாக்கிரபாதருடைய தர்மபுத்திரி நான். என்னுடையபெயர் ஹேமலேகை. இன்னும் எனது சரித்திர விநோதத்தை கேட்பாயாக. "ஒவ்வோரவயவமும் ஒன்றற்கொன்று உயர்வுதாழ்வின்றி அதிசுந்தரத்துடன் விளங்கும் வித்யுத்பிரபா என்னும் பெயருடைய ஒரு வித்யாதர ஸ்திரீயானவள் ஓர்நாள் வேணுஎன்ற இந்நதியில்நீராடவந்தனள். அவ்வமயம் சுஷேணன் என்ற வங்கதேசத்தரசனும் அந்நதிக்குவந்து சேர்ந்தான்; சர்வாங்க சுந்தரியும் வஸ்திரமகன்றவளுமான அவ்வித்யாதர ஸ்திரீயை இராஜன் பார்த்து காமனம்பால் துளைக்கப்பட்டவனாகி' அவளை இரந்துவேண்ட, அவளும் அரசன் அழகால் வசீகரிக்கப்பட்டு அவ் வரசனுக்கு அநுகூலப்பட்டாள். அரசன் பின்னர் வீடு சென்றனன். இராஜரிஷியின் வீரியத்தினால் அந்த ஸ்திரீ சீக்கிரம்கர்ப்பந்தரித்தாள். கர்ப்பத்தைக் கண்டதும் கணவனுடைய அபசார முண்டாகுமென பயந்து தான் தரித்த கர்ப்பத்தைக் கீழேவிட்டுச் சென்றாள்.

இராஜரிஷியின் வீரியத்தினாலே நான் கன்னிகையாகப் பிறந்தேன். அச்சமயத்திலே சந்தியாவந்தனத்துக்காக நதிக்குவந்த வியாக்கிரபாதர் என்னைக்கண்டு எடுத்துவந்து தாயைப் போல்வளர்த்தார். நான்அவரை பிதாவென்றே சொல்லுகிறேன். நான்அவருக்கு பிதிர் சேவையில் மிகவும் சிரத்தையுள்ள தர்மபுத்ரி.

அவருடைய தபோமகிமையால் இன்றும் பயமில்லாம லிருக்கின்றேன்; துர்நடத்தையுள்ளவர்களும் அசுரர்களும் இந்த வனத்தில் பிரவேசிக்கமுடியாது. இவ்வளவுதான் எனது விநோதவிருத்தாந்தம். இராஜகுமாரா! இதோ எனது பிதாவருகிற சமயம். அவரை நமஸ்கரித்து உமக்கு வேண்டும் வரங்களைப் பெற்றுக்கொண்டு விடியற்காலமே செல்லலாம்'' என்றாள்.

மன்னன் மகன் காமவசத்தனாக இருக்கிறானென்று விதுஷி (கற்றவள்) யான ஹேமலேகை கண்டு மறுபடியும் சொல்லுகிறாள்.

ஏ இராஜபுத்ரா! தைரியத்துடன் இரும், கூடியசீக்கிரம் வந்துவிடுவார்; அவரிடம் உமது அபிலாஷையைக் (விருப்பத்தை) கேட்டுக்கொள்ளலாம்" என்றாள்.

இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையில் வியாக்கிரபாதமுனிவர் சிவபூஜைக்காக பத்ர புஷ்பங்கள் எடுத்துக்கொண்டு வனத்தினின்றும் வந்தார்; உடனே இராஜபுத்ரன் எழுந்து தன்பெயர் சொல்லி சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, அவர் கட்டளையிட்ட பிறகு ஓராசனத்தில் அமர்ந்தான். இராஜகுமாரன் அனங்கன் அம்பால் அயர்ந்திருப்பதைப் பார்த்த வியாக்கிரபாதர் ஞானதிருஷ்டியினால் சர்வத்தையும் உணர்ந்து

இது யுக்தமே யென்று தீர்மானித்து, செம் பொற் சிலைபோன்ற ஹேமலேகையை, ஹேம சூடனாகிய அவ்விராஜ குமாரனுக்கு கன்னிகா தானஞ் செய்துகொடுத்தார். அரையன் மகன் அளவிறந்த சந்தோஷத்துடன் அவளையழைத் துக்கொண்டு நகரம் வந்து சேர்ந்தனன்.

அதன் பிறகு ஹேமசூடன் பிதாவாகிய முக் தாசூடன் மிகவும் சந்தோஷமடைந்து நகரெங் கும் பந்தல்களிட்டு அநேக உற்சவங்களுடன் விவாகத்தை நடத்தினன். மறையோருக்கும் வறியோருக்கும் வளங்கெழு மணியும் பொன் னும் வரையாது தந்தான்.

பிறகு, கண்கவர் வனப்புவாய்ந்த ஹேமசூட ன், ஹேமலேகையுடன் பருந்தும் நிகழலும் போலவும், கரும்புஞ் சுவையும் போலவும், பா ட்டும் பண்ணும் போலவும், பிரியாது உத்தி யானங்களிலும், ஆகாயமளாவிய வெண்சுதை தீட்டிய உப்பரிகைகளின் மேலும் சதா கிரீடா பரனாக.

மங்கைதன் மதனப் பார்வை
வழிச்சென்று மலர்த்தாள் நீவி
தங்கிய வுதர ரோமச்
சங்கிலி சார மாக்கிக்
கொங்கைமால் வரைமேற் றுவிக்
குழலிசைத் தேனீ யோச்சி
செங்கனி யிகழ்த்தே னீட்டி
வேட்டுவச் சிறுவன் போன்றே

"கடிகமழ் கனிவாய் வள்ளக்
கள்ளுண்டு மயங்கித் தேங்கி
வெடிதரு புழுகு நானம்
விரைகமழ் சேற்றுற் கொங்கைத்
தடவரை வழுக்கி ரோமச்
சாரமுந் தரியா துந்தி
மடுவெனுஞ் சுழிவீழ்ந் தாசை
மாப்பெருங் கடலி லாழ்ந்தான்."

(இன்னும் வரும்.)

---

## தருமம்.

(பி. வி. கிருஷ்ணசாமி ஐயர், தண்டையார்பேட்டை, சென்னை.)

---

அன்புடையீர் சீர்திருத்தமெனும் பதத்தை தாங்கிவரும் சிலர் பெரியோர்களால் ஸ்தாபிக் கப்பட்ட வேதாங்கவிதிகளை திரஸ்கரித்து மேல் நாட்டு சட்டங்களை நுழைக்க முயன்று வரு வதேயல்லாமல்; தருமமெனும் பதத்தினுரை யை யறியாமல் கூறுகிறார்கள். தர்மமென் னும் பதத்தின் மூலவிதிகளைவிட்டு பாஹ்யா சாரங்களை மாத்திரம் சிலர் தழுவியும், அநேகர் தவிர்த்து மிருக்கிறார்கள்.

இப்பொழுது அதை ஒரு சிறிது தெரிந்த வரையில் வரைகின்றேன். தருமம் சத்தியமா னது. தெய்வத்தை அறியச்செய்யும் முக்குணங் களில் மேன்மைபொருந்திய சத்வகுணபி விர்த் திக்கு இதே முக்கிய கருவியாகும். அந்தோ! இத்தகைய மூலக்கருவியை யகற்றி மேல்நாட்டு அநாகரீக முறைகளைப்பற்றி மேடைமீதேறி வீண் வினாக்களை எழுப்புகிறார்கள்.

மதுவானது, மாம்சத்திற்கு சகோதர ஸ்தா னத்திலிருப்பதால், முதலிலிருக்கும் மதுவை நீக்கும் உத்தமர்கள் மற்றொன் றையும் நீக்கவே ண்டுவதுதான். சிலர், தங்களுக்குச் சாதகமாக மநுஸ்மிருதியாதிகளில் மேற்கோள் காட்டுகிறார் கள். ஆனல், ஆதியில் ஆரியர்கள் மாமிசம் புசித் திருந்தனர் என்பது நிச்சயமே! அவ்வாறு தின ந்தோறும் புசிப்பது அயோக்கியம்; சிரார்த்த யாகாதிகளில் புசிப்பதுதான் யோக்கியம் என அதைநீக்குவதற்காக செய்தவோருபாயமாகும்.

திடீரென எந்த பழக்கத்தைவிட நேர்ந்தா லும் விட்டவனுக்கு சிறிது தேக அசௌக்கி யத்தைக் கொடுக்குமாகையால் இவ்வாறு சூழ்

ச்சி செய்தனர். இதை நோக்கியே சில பெரியோர்கள். அவ்வத்தேசத்து ஜீவர்களின் புக்குவத்தை நோக்கி சிலர் மாமிசம் தின்னலாமென கூறினர். உதாரணமாக கன்னடதேசத்து வீரசைவாசிரியராகிய மழைய மல்லேசுரர் ஐம்பத்தாறு தேசங்களையும் சுற்றிப் பிறகு மக்கமா நகரையடைந்து அவர்களது அபக்குவநிலையை நோக்கி, அவர் மதப்படியே முன்னர்ச் செலுத்தி பின்னர் தன்வயப்படுத்த எண்ணி, அவர் கொள்கைப்படியே நவிலத்தொடங்கினர்.

"ஏகமாயுள்ளது வஸ்து. அது உயர் ஒப்பில்லாதது, பொன் ஒன்று பணிகள் பலஎன்று ஒருமைகாட்டி மேலும் ஈண்டு வழங்கப்படுவதாகிய "லா இலாஹா இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூல்லாஹி" என மந்திரவாக்கியம் மிக்கவுயிர்கட்கு உயிராய் பரப்பிரம சொரூபமாகும்' என்று இயம்பினர். இதை,

"இகம தாகிய லாவிலா
காவில்லல் லாகு
முகம துர்ரசூல் லாகியென்
மந்திர மொழிதான்
மிகுமு யிர்க்குயி ராய்ப்பரப்
பிரமமா மெனமே
தகுமல் லேசர்தாஞ் சாற்றினர்
துருக்கர்க டமக்கு"

என வரூஉம் வீரசிங்காதன புராணத்தானுமறியலாம். இதனாலேயே நாமும், மேற்படி மந்திரத்தை ஜெபிக்கத் தொடங்கலா மென்பதும் நன்றே. இவ்வாறே ஒவ்வொரு பெரியோர்களும் ஒவ்வோ ரமயங்களில் சாதித்தனர். சிரார்த்த யாகாதிகளில் புலாலுண்டுவந்த ஆரியர் வரவர அறவே விட்டொழித்தனர். இதுதான் உத்தமம். தக்கோர்களும் இதையொப்புவர். இதைப்பற்றி பலவகையாக தர்க்கமிடில் முற்காலத் தரசர்கள் பலர் சூதாடினர், களியாட்டயர்ந்தனர், விதவா விவாகமும் நடத்தினர். இதையே இக்காலத்திக்கு மொக்குமென்றுசிலர் தர்க்கமிட முன்வருவர். வருகின்றனர். மேற்கோள்காட்டும் ஸ்மிருதியாதிகூட சிலவிடங்களில் கொலை தீயகருமமென ஒதுக்குகிறது.

இதை யறிந்த பெரியோர்களினி துணர்வார்களென்றே நம்புகிறேன். நிற்க, மேலே கூறிய தருமத்தை தழுவாமையால் நமக்குள்ள சொற்ப அந்தர ஞானமும் நமக்குப்பின் வருபவர்களுக்கு சூன்யமாய் விடுகிறது. இதற்குக்காரணம் நம்பிக்கைக் குறைவே.

தருமமெனில், "ஜகத்தை எது கீழ்விழாமல் தாங்குகிறதோ அதுவே தருமம். இவ்வுலகத்தை அகால பிரளயத்திற்குள்ளாக்காதபடி அமானுஷ ஜகத் சம்பந்த சர்வ சக்தியையுடைய ஸ்ரீ பரமேஸ்வரன் தனது திவ்ய சக்தியால் ரக்ஷிப்பதும் தருமமே" எனதேவி மீமாம்ஸ தர்ஸனத்தில் கூறப்பட்டுள்ளது.

எந்த ஈஸ்வரனுடைய சர்வாதிகாரம் உலகமெங்கும் வியாபித்து சகல ஜீவராசிகளையும் போஷிக்கிறதோ எது மோக்ஷத்திற்கு மூலமாய் ப்ரஜ்வலிக்கின்றதோ அதுவே தருமமாகும்.

"தருமம் ஜகத்திலுள்ள சகலத்துக்கும் மூலம். உலகத்தில் ஜனங்கள் தர்மிஷ்டர்களை ஆஸ்ரயிப்பார்கள். இத்தருமத்தினால்தான் பாபம் பறந்துவிடும். தருமத்தில் எல்லாம் அடங்கியிருக்கின்றன. ஆகையால் தருமம் பிரதானமானது" என வேதங்கள் கோஷிக்கின்றன.

நம்மால் காணப்படுகிற இவ்வுலகம், இடைவிடாதபடி சுழன்றுகொண்டு நயக்காக உழைக்கிறது. பிரளய காலம்வரை சிறு அணுவையும் நழுவவிடாமல் தாங்கி ஈஸ்வரகட்டளை மீறாமல் இருப்பதும் பிரத்தியக்ஷம். காலவளவு சென்ற பிறகு அழிவதும் உற்பவிப்பதும் ஆலோசிக்கின் அதுவும் ஒரு தருமமே யாம்.

தருமம் வஞ்சகமில்லாத சக்தியோடு அணுவுக்குள்ளும் சென்று ஒன்றோடொன்று ஒற்றுமைப்படச் செய்கிறது. ஒவ்வொரு அணுவிலும் அந்தரங்கமாக இரண்டு சக்திகளுண்டு (1) ஆக்ருஷணம் (2) நிராகரணம். இந்த ஆக்ருஷண சக்தியால் பஹிரண்டத்தின் தமோகுண

மானது அழிந்து குப்தமா (ரகசியமாய்) யிருந்த இராஜோகுணம் எழும்பி அணுக்கள்தோறும் பிரவேசிக்கப்பட்டு கோசரமாகிற ஜகத்தாகிறது.

நிராகரணத்தினல் (தள்ளுவதினல்) தமோ குணமீறி ஒவ்வோரணுவுள்ளும் உட்புகுந்து உள்ள ஸக்தியை நாசஞ்செய்து நித்திரைக்குள்ளாக்கி அகோசரப் படுத்துகிறது. ஆனல் எப்படி இரண்டு சக்தியும் ஸமமாயிருக்கிறதென்பது தத்வ சாஸ்திரிகளின் சிந்தனை. நம்முடைய தேகமானது ஆக்ருஷண சக்தியை (இழுக்கும் வன்மையை) மாத்திரம் பெற்றிருக்குமாயின் சரீரமழியும். ரத்த ஓட்டம் நின்றுவிடும், எலும்புகள் தொங்கிவிடும். கடைசியாக அசங்கதமான வஸ்துவாகிவிடும். இப்படியே நிராகரண சக்தியைமாத்திரம் பெற்றிருந்தால் பரமாணுக்கள் பிரபலமாய் தேஹாவயவங்களைக் கெடுத்து கடைசியில் சிருட்டியை நாசஞ்செய்துவிடும். இந்த இரண்டு சக்திகளும் ஒன்றுக்கொன்று அதிகப்படாமல் சரியாக நிலைக்கச்செய்து வியாபித்திருக்கும் திவ்விய சக்தியே தருமமாகும். இந்த தரும சக்தி மானுஷ சரீரத்திலேயே யல்லாமல் சூரிய சந்திர ராகு கேது முதலிய கிரகங்களிலு மிருக்கின்றது. 14-லக்ஷம் பங்கு பெரிதாய் ஒஜ்வாலயமாக ப்ரஜ்வலித்துக்கொண்டிருக்கு சூரியன்; நமது மாத்ரு பூமியை ஆக்ருஷிப்பது யாவருக்கும் விஸதமேயாகும். இப்பூமி நிராகரண சக்தி பெற்றில்லாவிட்டால் இதன் ஹ்ருதயத்தில் வசிக்கும் சகல பிராணிகளும் இப்பூமியும் சூரியனது ஹ்ருதயத்தை நெருங்கி எரிந்துபோயிருக்கும். சந்திரனும் இந்த திவ்விய நிராகரண சக்தியை யடைந்து நாசமடையாமலிருக்கிறது. இந்த இரண்டு திவ்விய ஆக்ருஷண நிராகரண சக்தியால் விகாரமடைந்தழியாமல் சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் யாவும் ஐக்கியமான பரஸ்பர ஒற்றுமையுடன் விராட் புருஷனில் வாழுகின்றது. இது எவ்வளவு பெரிய தருமமென்று நீங்களேயோசியுங்கள்

அநேக கோடி நக்ஷத்திரங்களும், கிரகங்களும் ஒன்றோடொன்று மோதி நாசப்படாமல் எப்போதும் அதனதன் வழிதவராமல் சுழன்று வரும் திவ்விய சக்தியாது? அதுதான் வேதங்களில் கூறியிருக்கும் சநாதன தருமம்.

ஆகாயத்தை யளாவிய சிகரங்களையுடைய மலைகள் பலவித வர்ணங்களையுடையதாய் கண்ணுக்குப் புலப்படுவகையும், மிருகாதிகளுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும் செழிப்பான நிலங்களையும், சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் பொன்கம்பிகளைப்போல் காணப்படும் வனுதிருக்களையும் வெள்ளியை யொப்பிடத்தக்க ஜலசந்திர பிரதிபிம்பங்களையும், கார்காலத்து இடிகளைப்போல் முழங்குகின்ற சிற்றாறுகளும், இருது அயனங்களைச் சார்ந்த சீதோஷ்ண ஸ்திதிகளையும் கவனிக்குங்கால் பிரகிருதி தருமத்தை என்னவென்று சொல்லுவேம் இதுவேதான் வேதங்களில் கூறுகின்ற தருமமாகும்.

(வரும்.)

## முக்கிய அறிவிப்பு.

சென்ற ஒருமாத காலமாக யாம் இலங்கைப் பிரதேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்ததில் இலங்கை நாடார் மஹாஜனங்களின் பூரண அபிமானத்தைப்பெற்று விசேஷ புது ஊக்கமடைந்திருக்கிறேமென்பதை மனப்பூர்வமாய்க குறிப்பிடக்களிபேருவகை யடைகின்றேம். சுற்றுப் பிரயாண சம்மந்தமான எமது அபிப்பிராயம் தாய்நாடு சென்றபின் வெளிவரும். இலங்கைப் பிரதேசத்தில் இன்னம் பல பகுதிகளுக்குச் செல்லமுடியாம லசந்தர்ப்பமேற்பட்டிருப்பது பற்றிப் பெரிதும் விசனிக்கின்றேம். அப்பகுதிகளிலுள்ள குலாபிமானிகள் மன்னிப்பார்களாக. பத்திரிகை சம்மந்தமான ஜோலி அதிகரித்திருப்பதால் நாளது ஜூன்மீ 17௳ மெட்ருஸ் பிரயாணமாவதாக தீர்மானித்திருக்கிறேம். ஆதலால், எம்மீது அன்புகூர்ந்து மித்திரன் "பாதுகாப்பு நிதிக்கு" நன்கொடை கையொப்பமிட்ட குலாபிமானிகளில் பாக்கியுள்ள கனவான்கள் பாக்கித் தொகையை ஷ தேதிக்கு முன்னடி எமது நண்பர் (ஸ்ரீ கெ. கலியாணசுந்த நாடார், 26-நெ. நாரிஸ் ரோட், கொழும்பு) என்ற விலாசத்திற்கு நேரில் அல்லது மணியார்டரில் அனுப்பி உதவக்கோருகின்றேம். யாம் விஜயம் செய்யாத பகுதியிலுள்ள குலாபிமானிகளும் தாம் விரும்புகிற நன்கொடையையும், சந்தாப்பாக்கிகளையும் அன்புகூர்ந்து ஷ விலாசத்தாரிடமே செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளலாம். சுபம்!

பத்திராதிபர்.

## விக்ரஹாராதனம்.

(ப்ரம்மவித்யா.)

ஐயா, முன்காலத்து புத்திமான்கள்தான் பாடுபட்டுச் சம்பாதித்த பொருளின் பெரும்பான்மையை மனதாறச் செலவழித்து அநேக பிரகாரங்கள் கோவிலடங்கிய தேவாலயங்களைக் கட்டிவைத்தனர். அவர்கள் கடவுளுண்மையில் பூர்ண விசுவாசிகளாதலின் வேதங்களைக்கற்றுணர்ந்தும் அறநூல்களை ஆராய்ந்தும், ஆகமங்களை அத்தியயனஞ் செய்தும் இவற்றுள் சாரமாயுள்ளது அர்ச்சைகளை ஆராதித்தலேயெனக் கருதி அதற்கென பொருளை விநியோகித்தனர். அவர்களினும் யாம் அதிகப் புத்திமான்களல்ல. சுவற்ப புத்தியுள்ளவர்களே. பவிஷ்ய முதலிய பல புராணங்களில் கலிகாலம் பெருக மனிதன் மதிகுறைவுபடுமென எழுதியிருக்கிறது. இக்காலத்திலுள்ள யாம் எம்முதாதைகளின் அறிவினு மதிக அறிவைப் பெற்றவராக நினைக்கிறோம். யாம் அவ்விதம் நினைப்பதும் எமது புத்திக் குறைவே. கவனியுங்கள்! முற்காலத்திலவதரித்த பாணினி முதலிய முனிவர் செய்ததைப் போல் ஓர் புதிய நூலைச்செய்ய யாம் வல்லோமோ? காளிதாஸன் முதலிய முற்காலத்துக் கவிவாணரைப்போல் நமக்கு கவிபாட ஆற்றலுண்டோ? எம்மிடம் தவம் குடியிருக்குமா? மந்திரம் மலியுமா? லோகங்களெல்லாம் நீர்க்தொழிய ஆயுள்வேத வுண்மைகளை அறிந்தோமா? கற்ப விதிகளால் காயத்தைக் கட்டுவோமா? புலன்களை அடைக்க எமக்குச் சத்தியுண்டா? மலைகளில் மயங்காது செல்லுவோமா? வானத்தில் மின்மினிகள்போல் ஒலிக்கும் சோதிகளின்உண்மையை அறிவோமா? ஆசாரங்களை வழுவாது அநுட்டிப்போமா? பின் துராசாரக் களஞ்சியங்களாக ஆவோமேயன்றி வேறேதுமில்லை. பாருங்கள்! இப்பலவித துராசாரங்கள் இக்காலத்திற் றோன்றுவதற்குப் பலவழிகளிக்காலத்திருப்பினும் அவைகளின் ரயில்வண்டியென்பது ஓர் பெரும்வழி. அதனால் விரைவில் வேறு இடங்களுக்குச் செல்லும் ஓர் குணமிருந்தபோதிலும் உண்டாகும் துர்க்குணங்களனந்தம். குடிமலிந்து அவர் முகத்தை முகர்வதும் புகை குடிக்கும் புத்திமச் சிகாமணிகள் "பூ" வென்றாதும் புகையைப் புண்ணிய நாற்றமாயுட்கொள்வதும் எமக்கிப்பொழுது இயல்பாயிற்று. அம்மட்டோ! யாதுரைப்போம். அந்தோ! இக்கலிக்கூத்து! இத்தீமை எம்முடன் ஒழியாது எமது அகத்து மங்கையற்கும் சம்பவிக்கின்றது. பெருங்கும்பலாய் வந்தேறும் பல ஜனங்கள் எவ்வித வேற்றுமையுற்றுப் பெண்களுடன் நெருங்க உட்காருகிறார்கள். அவர்கள் சரீரம் நமது பெண்கள்மேல்பட யாம் பரலோகத்திலுள்ள குற்றத்தை யறியாவிடினும் இகலோகத்திலுள்ள குற்றத்தையேயாமறிவோமா? ஏழைகளுக்கென்றால் மானமில்லையோ? நிற்க, மேலும் மகாநதிகளில் பாலங்களுடைந்தால் அனேகர் ஏககாலத்தில் எமலோகத்தைப்பார்க்க நேருகின்றது. இவ்வண்டி வெகு சீக்கிரத்திற் குறித்தவிடம் கொண்டுபோய்ச் சேர்க்குமென்பதுமாத்திரம் ஒருபெருமையல்ல. மற்று, நமது வருணாசிரம தர்மங்களையும் வெகு சீக்கிரத்தில் வெகு தூரங்கொண்டு போய்விடுகின்றது. இவ்விதம் பெருங் குறைகளை யாலோசித்துத்தான் போலும் இவ்வித வண்டிகளை நம்முன்னோர் கற்பித்தார்களில்லை; யாம் மட்டும் ஏதோ நம்முன்னோர்க்கிவ்வழி தெரியாதென வெண்ணுகிறோம். யாம் புத்திமான்களெனச் சொல்லிக்கொள்வது அவரது புத்திப்பெருமையை யறியாத காலத்துப்பரிமளிக்குமேயன்றி அறிந்தவிடத்து அது பெரும் வெட்கத்தைத் தருமென் பதற்கையமில்லை. ஆயின் அக்காலத்தில் விக்கிரகங்க

ளில் அவர்கள் கடவுளை வழிபட, கடவுள்அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாயினரென்பதில் எதும் பயமின்று. அங்ஙனமாயின் இக்காலத்தவர்க்கும் அவர் ஏன் பிரத்தியக்ஷமாகவில்லையெனில், முற்காலத்தவரைப்போல எம்மில் எவர் கடவுளிடம் அன்புவைத்தவர இவர்களுண்ணுஞ்சோறு அறக்கூழ்ச்சாலையிலேனும் விலைக்கூழ்ச்சாலையிலேனுமே இவர் நாடோறும் நாவாலியன்றமட்டும் பொய்களை நவிலுவர். பெரியோர்களை நிந்திக்கும் பெருமை இவர்க்குண்டு. வேதங்களை நம்பாவிருதுபூண்டவர். ஆகமங்களை ஆயாத ஆண்மைபெற்றவரிவர். காயத்திரி சபியாத காயந்திற முடையவரிவர். குருநிந்தை செய்யும் குலோத்துங்கரிவர். விண்டுவை நிந்திக்கும் வீரசைவரிவர். அரனைப்பழிக்கு மரிமத்தரிவர். புறமதாசிரியனைப் புண்படுத்தும் புலவரிவர். பாகியமதம் பயின்ற பரவாணரிவர். காபி குடிக்கும் கவிஞரிவர். மேலும் அக்காபி குடித்தால் ஆயுள் பெருகுமெனவும், அமிருதமிருத்தியுஞ்செயமெனவும், ஆரியருக்கின்றியமையா அனுஷ்டானமெனவும் நினைந்தொழுகுகின்றனர். அந்தோ! எம் மூதாதிகள் எக்காபி குடித்துப் பல்வாணராயினர். கொடிது! கொடிது! இக்காபி யென்பது கைப்பணந்தொலைய ஓர் வழி. இஃதோர்புறங்கிடக்க. எம்மூதறிஞர் எவ்வாலயங்களுக்குரிய ஆகமங்களை யறிந்தாசிரியனைக் கண்டெடுத்து அவன் எடுத்தோதும் விதிகளுக்குச் சிறிதுங் குறைவின்றியே நிறைவேற்றுவார்கள். யாம் பற்பல பழய வாலயங்களை ஜீர்ணோத்தாரணஞ் செய்யுங்காலத்தில் பார்த்திருக்கின்றோம். பெலாமுதலிய முறைகள் அமைத்தனவென்றே காணப்படுகின்றன. இக்காலத்தில் சிலர் பெருமைக்கெனத் தேவாலயங்கள் கட்டப்புகுந்து பூமியைப் பரிக்ஷிக்காமலும், அங்குழாமலும், பயிர் வளர்க்காமலும், பசுக்களை மேய்க்காமலும், சங்குஸ்தாபனஞ் செய்யாமலும், ஈசானிய நிர்ணயமறியாமலும், உபாகஹோமம் நடத்தாமலும், சல்லிகளை எடுக்காமலும், அதிகப் பணத்தை வாங்கும் பெருஞ் சிற்பியைக்கொண்டு தேவாலயங்களைக் கட்டுவிக்கின்றனர். இவர்குடங்கட்கு நன்றாய் நூல் சூத்ரத்தெரிந்த குருக்கள்மார்களைக்கொண்டு கும்பாபிஷேகமும் செய்வித்து விடுகின்றனர். அக்குருக்களோ கையிற் கங்கணம்பூண்டு எதிரில் சாதகாசாரியனொருவனை யுட்கார்த்தி அவன் கையில் ஓர் ஓலைப்புத்தகத்தைக்கொடுத்து அதிற்கண்டபடி யவன் படிக்க இவர் ஏதோ தியானஞ்செய்து வருகின்றனர். இவருக்குப் பூதசுத்தி எங்கே? பிராணாயாமம் பறந்தது. மாதிரிகாநியாசம் மறைந்தது. தியானம் தவறியது. மானசபூஜை மயங்கியது. ஆவாகனம் அந்தாத்திற்றன். இங்ஙனமாயின் கடவுள் பிரத்தியக்ஷமாவது காண்பதரிதே. இவ்விதம் யாம் எழுதுவது ஆகமங்கள் யறிந்தவரைக்கொண்டு ஆலயக்கிரியைகளை நிறைவேற்றவேணுமென்ற எண்ணத்தாற்றன். இனி இக்காலம் ஆகமப்பயிற்சியுள்ள ஆசிரியரும் சில்பிகளும் அகப்படாமையால் விக்கிரகாராதனமிக்காலம் வேண்டுவதில்லை என வாதிப்பீரேல் ஈண்டுக் கூறுவாம். உலகத்தில் தம் தம் சரீர இயல்பு மாறாது அவனவன் புசிக்கல்வேண்டுமென வைத்திய சாஸ்திரங்கூறிடின் அவ்வைத்தியத்திற்கூறிய பொருட்கிட்டாவிடம் பசியால் வருந்தி மாளவேண்டுவதாக வைத்தியர் கருத்து. நாம் நற்பொருளுக்காகவே தேடியது கிடைக்காவிடம் உள்ளதைக்கொண்டு வேலையை முடித்துக்கொள்ள வேண்டியதாகையால் இவ்விடத்தும் கூடியவரைத் தகுந்த ஆசிரியரைக்கண்டெடுத்து அவர்வழி ஆலயங்களில் வழிபடவேண்டுவதே. அர்ச்சைகளைத்தவிர்த்து அப்பரம்பொருளையடைய வேறு நல்வழி யாதுமில்லை. இனி உள்ளுணர்வன்றித் தற்செயலாய்க் கடவுளது திருநாமத்தை யுச்சரிப்பினும் அவரை யாம் மனத்தில் நினைப்பினும் எமது பாவமொழியும். அங்ஙனம் பண்டிதர்முதற் பாமரர் வரையில் பெரும்பயன் பெறுவது இவ்வாலயங்களாற்றன். ஒரு அறிவீனனும் வழியில் நடக்கக்கூட

நடக்கும் பெரியோர் ஆலயந்தைக்கண்டு கைகூப்ப சுவாமி இஃதேதெனெ, அவன் வினவுவான்; அவர் கோயிலென்பர். இவன் சுவாமி! இது சிவன் கோயிலா, அல்லது பெருமாள் கோவிலாவென்பான். அவர் இஃதெனத்துணிந்தோத மற்றவரைப்போல் இவனும் கும்பிடுவான். ஆயின் கடவுளை நினைக்கவும் அவர் பேரை உச்சரிக்கவும் அக்காலங் கடவுளை வழிபடவும் கோரிடுகிறதல்லவா? இவ்வளவும் அவ்வாலயங்களிருப்பதின் பயனன்றோ? இனி சிவாலயமெனின் அங்கு மான் மழு தரித்த திருவுருவமிருக்குமெனவும், விஷ்ணுவாலயமெனின் திருவாழி திருச்சங்கு தரித்த திருவுருவமிருக்குமெனவும் நினைப்பான். (இன்னும் வரும்.)

காலிநகரில் நமது க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபர்

## ஸ்ரீமான் விஜயன் அவர்கள் விஜயம்.

(பே. தேவாச்சரிய நாடார்.)

நமது கனம் க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபர் ஆ. விஜயதுரைசாமி கிராமணியவர்கள் தமது சகாக்களோடு 9-5-23 இரவு இவண் விஜயம்செய்தார்கள்; ஸ்ரீமான் பத்திராதிபரவர்கள் வரவு காலியிலுள்ள நாடார் சகோதரர்கள் யாவருக்கும் பெருத்த குதூகலத்தைக்கொடுத்து, அவர்களை உபசரிக்கும் பொருட்டு 10-5-1923 ஆகிய நேற்றுத்தினம், தங்கதாரோட்டில் 105-ம் நீர் நாடார்கள் கட்டடத்தில் ஓர்பொது மீட்டிங்கு, குலாபிமானச் செல்வரும், காலிநகரிலுள்ள பிரபல வியாபாரியுமான ஸ்ரீமான் A. E. ஆபிரகாம் நாடாரவர்கள் அவைத்தலைமையின் கீழ்கூடி உபசரிக்க வேண்டுமென்று யாவரும் சந்தோஷமோடு இரவு 9-மணி சுமாருக்கு கூட்டத்தை ஆரம்பித்தனர். சபை கூடினதும், ஸ்ரீமான் யா. பரமானந்த நாடாரவர்கள் ஸ்ரீமான் A. E. ஆபிரகாம் நாடாரவர்களை அக்கிராசனம் வகிக்குமாறு பிரரேபித்தனர். ஸ்ரீமான் V. ஏசுதாஸன் உபதேசியாரவர்கள் ஆமோதிக்க சந்தோஷ ஆரவாரமோடு அக்கிராசனர் தமது ஸ்தானத்திலமர்ந்தும், யாவருக்கும் வந்தனம் சொல்லி நமது பத்திராதிபரவர்களை சபையோருக்கு அறிமுகம் செய்ததோடு அவர்களின் குலாபிமானத்தையும், அவர்கள் நமக்கு செய்துவரும் தியாகத்தினையும் வியந்து கூறியதோடு அவர்களது விஜயத்தின் நோக்க மின்னதென்பதை அறிவித்து நாமும் நமது கடமையைச்செய்து சந்தோஷமாய் உபசரித்து அனுப்பவேண்டுமென்று குலாபிமானப் பெருக்கால் பிரசங்கமாரி யொழிந்தனர். பின் அருப்புக்கோட்டை, ஸ்ரீமான் செ. ப. உலகநாத நாடாரவர்களும், நண்பர் பா. பி. இரத்தினபாண்டிய நாடாரவர்களும் பேசினார்கள். அதன் பின் க்ஷத்திரிய சிங்கமாகிய நமது பத்திராதிபரவர்கள் "நாம் யார்" என்ற விஷயமாய் பல உதாரணங்களோடு பேசி முடித்ததும் ஸ்ரீமான் ஏசுதாச னுபதேசியாரவர்களால் வந்தனோபசாரம் கூறப்பட்டு சபை கலைந்தது.

வெண்ணப்புரை கொழிஞ்சடியில்

## க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபர் விஜயமும், வரவேற்பு கூட்டமும்.

(கொளம்பு; நிருபர்.)

வெண்ணப்புரை கொழிஞ்சடி பகுதி நாடார்களின் வேண்டுகோட்கிசைந்து, நமது க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபரவர்கள் விஜயம் செய்வதாக இசைந்துள்ளதை முன்னிட்டு, அச்சிநோட்டீஸ்மூலம் பலருக்கும் அறிவித்து 24-5-23 தினத்தில் பகல் 2-மணிக்கு கொழிஞ்சடி ஸ்ரீமான் சோ. ப. தங்கையா நாடாரவர்கள் கடைகட்டிடத்தில் வரவேற்பு உபசாரமீட்டிங்கு ஆரம்பிக்கப்பட்டது. காலை 8-மணி ரெயிலுக்கு கனம் பத்திராதிபரவர்களும் சகாக்களுடன் விஜயம்செய்தார்கள். நாடார் குலாபிமானிகள் அதிபரவர்களை ரெயில்வே பிளாட்பாரத்தில் வரவேற்று பூமாலைகள் போட்டு சந்தோஷ ஆரவாரமோடு மோட்டாரதத்தி லமரச்செய்து, மெல்லன ஊர்வலமாக மீட்டிங்கு கட்டிடத்திற்குக் கொண்டுவந்தார்கள். வெண்ணப்புரையில்

கடைவைத்திருக்கும பணிக்க நாடான் குடியிருப்பு ஸ்ரீமான் போ. சாமி நாடாரவர்கள் இடையில் அதிபரவர்களை உபசரித்தனுப்பும் பொருட்டு தமது கடைமுன் வாழைகளால் பந்தலலங்காரம்செய்து வாவேற்றமரச்செய்து வந்துள்ள அனைவருக்கும் சிற்றுண்டியளித்து உபசரித்தனுப்பியது கவனிக்கத்தக்கது. இவ்வித ஊர்வலமாக கொண்டு வந்து மேற்குறித்தபடி 2-மணிக்கு அருப்புக்கோட்டை ஸ்ரீமான் செ. ப. உலகநாத நாடாரவர்கள் அக்கிராசனத்தின்கீழ் மீட்டிங்கு ஆரம்பமாயிற்று. கடவுள் வணக்கம் ஸ்ரீமான் ஞா. பா. ஞானையா நாடாரவர்களால் சொல்லப்பட்டது. கொளும்பு ஸ்ரீமான் பா. பி. இரத்தினபாண்டிய ரவர்கள் அதிபரவர்களை சபையாருக்கு அறிமுகம்செய்தனவைத்தும் ஸ்ரீமான் ச-வே. சுந்தரநாடாரவர்களால்அதிபாவர்களுக்கு உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டது. கனம் அதிபாவர்கள் உபசாரபத்திரத்திற்கு வந்தன மளித்தலோடு "ஒற்றுமை ஜாதி" என்னும் விஷயமாய் உபந்யாசிக்கப்பட்டது. நாடார்கள் அநேகர் விஜயம் செய்திருந்ததோடு கிராம முனிஸீபும் ஊரின் முக்கியஸ்தருமான, ஸ்ரீமான் வர்ணகுலசூரிய எலாரீஸ் பெர்ணண்டு அவர்களும் இன்னும்பல சிங்களவர்களும் விஜயமாகி யிருந்தார்கள். ஷையார்களால் பல கேள்விகள்கேட்கப்பட்டது. அவைகளுக்கு நமததிபரவர்கள் தகுந்தமாதிரிபதிலளித்து சந்தோஷிப்பித்தார்கள் கிராமமுனிஸீப், அக்கிராசனருக்கும் அதிபாவர்களுக்கும் பூமாலைபோட்டு, நீர்கொளும்பு ஸ்ரீமான் ஜெ. எஸ். நல்லதம்பி நாடாரவர்களால் வந்தனோபசாரம் நீண்ட அரிய பிரசங்கமோடு சபை இனிதுநிறைவேரியதோடு, க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்பு நிதிக்கும் சந்தோஷ ஊக்கமுடன் நிதி அளிக்கப்பட்டது.

---

## இரத்தினபுரியில் நமது பத்திராதிபரவர்கள் விஜயமும், உற்சாக வரவேற்பும்.

(R. P. முத்து நாடார், சிலோன்.)

நமது க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபரவர்கள் இலங்கைக்கு விஜயமாகி யிருக்கின்றார்களென்றறிந்த, இரத்தினபுரி வாசிகளான நாடார் குலாபிமானிகள். யாவரும் மிகுந்த சந்தோஷமடைந்தவர்களாய் பத்திராதிபரவர்களை, வரவேற்றுபசரித் தனுப்பவேண்டுமென பலரும் விருமபியதற்கிணங்க, 79-கெ. மெஸரஸ் ப. சி. சு. க. சிதம்பர நாடாரவர்கள், மளிகை மாடியில் (20-5-23) பகல் 2½-மணி சுமாருக்கு மீட்டிங் ஆரம்பிக்கப்பட்டது. இக்கூட்டத்தை ஓர் கான்பரன்ஸ்போல் நடத்தி சிறப்பிக்க விரும்பி வரும் பிரதிநிதிகளுக்கு போஜன வசதி முதலிய சப்ளைகளுடன் ஏற்பாடு செய்து, பல இடங்களுக்கும், அழைப்பு நோட்டீஸ் அனுப்பப்பட்டிருந்ததால், அநேகர் விஜயமாகி யிருந்தார்கள். (20-5-23) பகல் 12-55-ரெயிலுக்கு கனம். பத்திராதிபரவர்களும் அவர்களோடு, அருப்புக்கோட்டை ஸ்ரீமான் செ. ப. உலகநாத நாடாரவர்களும், கொழும்பிலிருந்து ஸ்ரீமான், பா. பி. இரத்தினபாண்டியர், கெ. கலியாணசுந்தர நாடார், வீர. துரைபாண்டிய நாடார் முதலிய அபிமானிகளும் விஜமானார்கள். அவ்வமயம் ஸ்ரீமான், ப. சி. சு. க. சிதம்பர நாடாரவர்களும் ஸ்ரீமான், D. S. பவர் நாடாரவர்களும் மற்றும் நாடார் குல கனவான்களும் புடைசூழ ரெயில்வே பிளாட்பாரத்தில் வந்து ஸ்ரீமான், ப. சி. சு. க. சிதம்பர நாடாரவர்களால், கனம் அதிபாவர்களுக்கும் ஸ்ரீமான், செ. ப. உலகநாத நாடாரவர்களுக்கும், விசேஷ குதூகலத்துடன் புஷ்பஹாரங்கள் சூட்டப்பெற்று, மோட்டார் இரதங்களில் வைத்து ஊர்கோலமாக மீட்டிங்கு கூடும் மளிகை மாடிக்கு அழைத்து வந்தார்கள். வேண்டிய உபசாரங்களோடும் போஜன வசதி செய்யப்பட்டதும், மாலை 2-30-க்கு மீட்டிங் ஆரம்பிக்கப்பட்டது. பாம் கார்டன், சீப் கிளார்க் ஸ்ரீமான், D. S. பவர் நாடாரவர்களை, இம் மீட்டிங்குக்கு அக்கிராசனம் வகிக்க வேண்டுமென கொழும்பு ஸ்ரீமான், கெ. கலியாணசுந்த

ரரவர்கள் பிரரேபிக்க, காபிஞ்சா கஸ்டகறம் ஸ்ரீமான் S. தேவாசீர்வாத நாடாரவர்கள் ஆமோதிக்க ஸ்ரீமான், S. டேவிட் நாடாரவர்கள் முறையே ஆதரித்து அக்ராசனர் தெரிந்தெடுக்கப் பட்டது. மீட்டிங்குக்கு சிவகாசியிலிருந்து ஸ்ரீமான், K. S. மாணிக்கவாசக நாடாரவர்கள் விசேஷ அபிமானத்துடன் அனுப்பிய தந்தியும் கடிதமும் மதுரை நாடார் மஹாஜன சங்கக் காரியதரிசி ஸ்ரீமான், மா. வெ. பழனிச்சாமி நாடாரவர்கள் அனுப்பிய உற்சாகக்கடிதமும், மற்றும் பல அபிமானிகளால் அனுப்பியிருந்த கடிதங்களையும், ஸ்ரீமான், S. தேவசீர்வாத நாடாரவர்கள் வாசித்தனர். கொழும்பு ஸ்ரீமான். பா. பி. இரத்தினபாண்டியரவர்கள், கனம், கிராமணியா ரவர்களை, சபையோருக்கு அறிமுகப்படுத்தியதோடு, அவர்களின் நோக்கத்தை தெளிவாய் எடுத்துரைத்தார்கள். இக்கூட்டத்தை வெகு சிறப்போடும் நடத்திவைக்க கங்கணம் பூண்டு அபாரசிரமமெடுத்து, மிகுந்த உற்சாகத்துடன் நடைபெற, காரணபூதராயிருந்த ஸ்ரீமான், ப. சி. சு. க. சிதம்பர நாடாரவர்களால் நீண்ட கரகோஷத்தினிடையே கனம் அதிபரவர்களுக்கும், அக்ராசனர் ஸ்ரீமான், D. S. பவர் நாடாரவர்களுக்கும், புஷ்பஹாரங்கள் சூட்டப்பட்டதோடு, ஸ்ரீமான், S. தேவாசீர்வாத நாடாரவர்களால், உபசாரபத்திரமும் வாசித்துக் கொடுக்கப்பட்டது. அதிபரவர்கள் உபசாரப் பத்திரத்திற்குப் பதிலளிக்கையில் "அறம் செய்தல்" என்னும் பொருள்பற்றி, விரிவாய் உபந்யாசித்ததோடு, சபையார்களின் வேண்டுகோட்கிணங்கி "குல ஆராய்ச்சி" யையும் நன்கு விஸ்தரித்துரைத்தார்கள். சிவகாசி, ஸ்ரீமான், K. S. மாணிக்கவாசக நாடாரவர்கள் கடிதத்தின் மூலம் கோரியபடி இன்று கூடிய மகாநாட்டை "இரத்தினபுரி ஜில்லா முதலாவது கான்பரன்ஸ்" என்று அழைக்கவும் வருடந்தோறும், இந்தக்கான்பரன்ஸை, தொடர்ந்து நடத்தவேணுமென்றும், அதற்கனுகூலமாக ஓர் சங்கம் ஸ்தாபித்து நடத்துவது, உசிதமென அக்ராசனர் பிரரேபிக்க. மாதம்பை, எஸ்டேட் கிளார்க் ஸ்ரீமான், S. டேவிட் நாடாரவர்கள் பலசங்கங்கள் தோன்றி மறைந்திருப்பதாகக் கேள்விப்படுவதோடு பார்க்கவும் செய்கிறோம். கொழும்பு இந்திய க்ஷத்திரிய நாடார் சங்கம் இருக்கும் நிலமை, வருத்தத்தைத்தருகிறதென்றும், ஸ்தாபித்தால், கொண்டு செலுத்தத் திறமை வேண்டும், யாவரும் இதில் உற்சாகத்தோடும் ஒற்றுமைத்து, வளரச் செய்தல் வேண்டும். ஊக்கத்துடன் நடத்தக் கூடுமானால் ஸ்தாபிக்கலாம். இல்லாத விஷயத்தில் பேசாதிருப்பதே பெருமையென்றும், கொழும்பு சங்கத்தின் நிலமை தற்போது எவ்வாறிருக்கிறதென்றும், சிறிது தொகையிருப்பதாய்த் தெரிந்தோம். அதன் வாலாரெப்படி யென்றும், கேட்டார்கள். ஸ்ரீமான், கெ. கலியாணசுந்தர நாடாரவர்கள் கேள்விக்கு தகுந்த விடையளித்ததோடு. நமது அதிபரவர்களின் வரவால் சங்கம் ஸ்தாபகம் செய்தல் நன்மையே. கடவுள் எப்பொழுதும் அபிவிர்த்தியுடன் நடத்திவருவாரெனக் கூறி, சங்கத்தை, ஆரம்பத்திலேயே, மதுரை நாடார் மஹாஜன சங்கத்துடன் ரிஜிஸ்டர் செய்துவிடும்படியாக ஆலோசனை சொல்லவும், தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, நிறைவேறியது. பின் நம் க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்பு நிதிக்கு உற்சாகத்துடன் நிதி வசூலாரம்பிக்கப்பட்டது. இத்துடன் சபை கலைந்ததும் பின் இரவு சுமார் 9 மணிக்கு மீட்டிங்கு ஆரம்பிக்கப் பட்டு சங்கம் ஸ்தாபனமாயிற்று, "சப்ரகமுவமாகாண க்ஷத்திரிய நாடார் சங்கம்" என்று சங்கத்திற்கு பெயரிட வேண்டுமென தீர்மானமானதோடு, தலைமையாபீஸ் இரத்தினபுரியிலெனவும், பிரஸிடெண்டாக, ஸ்ரீமான், D. S. பவர் நாடாரவர்களையும், வைஸ்பிரஸிடெண்டாக ஸ்ரீமான், S. தேவாசீர்வாத நாடாரவர்களையும், பொக்கிஷதாராக மெஸர்ஸ். ப. சி. சு. க. சிதம்பர நாடார் அன்கோ அவர்களையும், ஆடிட்டராக

ஸ்ரீமான் S. டேவிட் நாடாரவர்களையும், செக்ரெட்டேரியாக, ஸ்ரீமான், R. P. முத்துநாடாரவர்களையும் தெரிந்தெடுக்கப் பட்டது. சங்கம் ரிஜிஸ்டர் செய்யும் பொருட்டு மதுரை தலைமை சங்கதுக்கு காரியதரிசி 3 மூன்றுரூபாய் அனுப்பி, சர்ட்பிகேட் வாங்கினதும் முதல் கூட்டம் கூடுவதாக தீர்மானித்து சந்தோஷ ஆரவாரத்துடன் வந்தனோபசாரங் கூறப்பட்டு சபை இனிது கலைந்தது. சுபம்!

குறிப்பு:--கனம் அதிபரவர்கள் இலங்கையிலுள்ள நாடார் மஹா ஜனங்கள் நமது நாடார் பாங்கியில் அவரவர்களாலியன்றளவு பங்கு எடுக்க வேண்டுமென்றும், பாங்கியினு லேற்படும் நன்மைகளைப் பற்றியும் சபையோர்களுக்கு நன்கு விளங்கும்படி எடுத்துரைத்து வற்புறுத்தியதோடு மதுரை நாடார் மஹாஜன சங்கத்துக்கு ஒவ்வொருவரும் அங்கத்தினர்களாக சேர வேண்டுமென்றும், உபதேசித்ததில் அதன்படி செய்வதாக அநேகர் வாக்களித்தனர்.

---

## இரத்தினபுரியில் கனம், அதிபரவர்களுக்கு வாசித்துக்கொடுத்த
## உபசாரப் பத்திரம்.

---

நம்மாபிஞேர்கட்குப் பல்லாண்டுகளாக யிருந்துவந்த இடுக்கண்களை வேரறக்களைந்து புராதன வுரிமைகளை நிலைநிறுத்த வேணுமென்ற வைராக்கியமென்னும் விரதம் பூண்டு அதற்குறிய தொண்டு புரிவதே தொழிலாகக் கங்கணங் கட்டிக்கொண்டெழுந்த கருணையங்கடலே தங்களின் வரவு நல்வரவாகுக.

கடந்த நாலு வருஷங்களாக, நம்குல நன்மையின் பொருட்டு வேலை செய்தலே சிறந்த ஜீவித மென்றுணர்ந்த தாங்கள், சுயநலங் கருதாது உழைத்துவரும் உழைப்பில் வரும் கஷ்ட நிஷ்டூரங்களினிடையே பின்வாங்காது, எடுத்த காரியத்தைச் செய்து முடிப்பதே சரியென்று, பெருமுயற்சி செய்து நிற்கின்ற தாங்கள், நம் பூர்வமாண்பை யறியாது அசட்டுத்தனமாய்ப் பிதற்றிய, அறிவிலிகளின் ஆர்வங்களை அடக்கியும், நமது பால்ய நண்பர்களின் கோழைத்தனமென்னும் அந்தகாரத்தை நீக்கி க்ஷத்திரிய வீரதத்துவங்களின் நன்மதிகளைப் புகட்டவேண்டி பல பாஷா நூற்களின் ஆதாரங்களோடும், தங்களால் வரையப்பெற்ற அரும் பெரும் விஷயங்களென்னும் நவரத்தினங்களுக் கொப்பாகிய மாலைகளைச் சூடியும், வித்வாம்சர்களா லெழுதப்படும் அருமையான வியாசங்களும் அமையப்பெற்று சஞ்சீவிபோன்ற க்ஷத்திரியமித்திரனென்னும் சஞ்சிகை தந்த, தயாள குணசீலரே'' தங்களின் திவ்ய முகதரிசனம் எப்போது கிடைக்குமென் றேக்கமுற்றிருந்த நாங்கள் விரும்பி யழைத்ததற்கிணங்கி, பாண்டிய குலாபிவிர்த்திக்காகப் புகட்டிவரும் போதனைகளுக் கிடையூறாகத் தங்களின், வித்வசம்பிரதாயங்களை யறியாது கிளம்பும் போலி வித்வான்களின் மூடமதிக்குத் தக்க ஒளஷதங்களைக் கொடுக்கத்தாங்கள் தயாராகுமுன் கற்றுணர்ந்த பல அறிஞர்களும் ஒப்பக்கூடிய நீதிகளென்னும் ஒளதங்களாலூட்டி அடக்கத்துணியும் கல்வித்திறமை வாய்ந்த தங்களாப்த நண்பர் செ. ப. உலகநாத நாடாரவர்களோடும், குலாபிமானமே ததும்பிநிற்கும் பால்ய நண்பர்களோடும் இவண் விஜயஞ்செய்து எங்களுள்ளத்தில் புளகாங்கிதமான இடையறாத மகிழ்ச்சியை யூட்டுவித்த இக்காட்சியை எங்களிலொவ்வொருவரும் தம் தம் வாழ்நாட்களில் சிறந்த மாக்ஷியெனக் கருதி, பெரிதும் நன்றியுள்ளவர்களாகக் கடமைப்பட்டிருக்கிறோம். ''சிறிதும் சலிக்காத இரும்பினல் ஆக்கப்பட்டது போன்ற திடசித்தத்தையுடைய சூரியகுலச் சிங்கமே!

இத்துணை சிறப்புவாய்ந்த தாங்கள் தன்னலவெறுப்புடன் நம்குல மேன்மைக்காகச் செய்துவரும் முயற்சிகளில் கடவுளின் ஆசீர்வாதம் உங்களுடனிருந்து, என்றும் பொன்றாப் புகழுடன் அரோக திடகாத்திர சரீரராய் மனைவி மக்களுடன் என்றும் நன்றுவாழ வெம்பெருமான் செம்பொற்கமலங்களை இறைஞ்சித் துதிக்கின்றோம். சுபம்!

இங்ஙனம்,
நாடார் குலாபிமானிகள்
இரத்தினபுரி, சிலோன்.

---

## இலங்கை வர்த்தமானம்.

(நாடார்குல மித்திரன்.)

அறிவீனம், அசட்டுத்தனன் முதலியவைகளுக்கு ஆப்புகள் கடாவி ஆணிவேர் ஆழமாய் அசையாவண்ணம் இறக்கின நமது "க்ஷத்திரியமித்திரன்' அதிபர் ஸ்ரீ, த. விஜயதுரைசாமி கிராமணியாரவர்கள் இவ்விலங்கா கற்பத்திற்கு விஜயஞ் செய்வதையிட்டு யார்தான் அகமகிழ்வுடன் ஆனந்தங் கொள்ளா திருர்கச்கூடும். இலங்கை நாட்டரசனுகிய ஈழன் இங்கு ஜீவித்திருந்து ஆட்சிபுரியின் கிராமணியார் வருகையை தமது சகோதரரின் வருகை யெனக்கருதி அன்னவர் ராஜகோலத்துடன் யானையம்பாரியின்மீது மந்திரிமார் புடைசூழ வெகு ஆடம்பரமாக தமதாண்மனையில் வரவேற்றிருப்பாணன்றோ? அத்தகைய பாக்கியம் பெறுதிருப்பினும் அவனது குலத்தவர்களாகிய நாம் என்னசெய்யக்கூடும். கிராமணியவர்கள் பலநோக்கங்களையிட்டு விஜயஞ் செய்திருப்பினும், தற்சமயம் அவர்களின் ஆராய்ச்சிக்குத் தூண்டு கோலாகவும் சுடரொளியாகவும் விளங்காநின்ற க்ஷத்திரிய மித்திரனை சென்னையம்பதியிலே தண்டையார்பேட்டையிலே பல ஜீவன்களுக்கும் நிழலைக்கொடுக்கும் ஆலமரத்தைப்போல் நமது குலத்தவர் யாவருக்கும் அறிவாகிய நிழலைக் கொடுத்து, அசையாத ஆணிவேரையிறக்கி, பல கிளைகளுடன் செழித்தோங்கி என்றும் பிரகாசிக்க செய்வதே பிரதானமாகும். ஆகையால் ஆலமரமாகிய "க்ஷத்திரிய மித்திரனுக்கு" உயிர் நிலைக் காதாரமான தண்ணீரென்ற பொன்னீரை (பொன்-நீர்) ஊற்றுவது நமது கடமையென்று நாம் தெள்ளிதின் அறியவேண்டும். நாம் கிராமணியவர்களை வரவேற்று உபசரிக்கிறது மாத்திரமல்ல. நமது பத்திரிகையும் எக்காலமும் தனது கிரஹத்தின்கண் வெற்றிக் கொடியை விரித்தாடச்செய்து, சந்திர சூரிய குலத்தவர்களுக்கு சான்றாக நிற்றல் அவசியம் என்பதை நாம் நன்குணரவேண்டும். இலங்கை நாடார்கள் தங்களபிமானத்தை காட்டுவது இதுவே ஏற்றசமயம். கிராமணியவர்கள், குலாபிமானியும் 'நாடாரென்னுஞ் சொல்லாராய்ச்சி' என்னும் புத்தகத்தின் அரங்கேற்றும் நிதிக்கு பொக்கிஷதாருமான கனம் செ. ப. உலகநாத நாடாரவர்களுடன் விஜயஞ்செய்திருக்கிறார்கள். கப்பலிலிருந்திறங்கின நாள்முதல் கிராமணியாரவர்கள் நிமிஷமாவது வீணாகக் கழிக்கின்றதாகத் தெரியவில்லை. கூடியசீக்கிரத்தில் "ஈழராஜன் சரித்திர" மெழுதுவார்களாகையால் இவ்விஷயமாய் எழுதப்பட்டிருக்கும் கிரந்தங்களையே வெகு துரிதமாய் ஆராய்ச்சி செய்வதில் கண்ணும் கருத்துமாயிருந்து வருகிறார்கள். வெளியில் உலாவப்போகும்போது சரித்திர சம்பந்தமாகவுள்ள இடங்களைப் போய்ப்பார்த்து வருகிறார்கள்.

இலங்கை க்ஷத்திரியகுல நாடார் சங்கத்தார் மீண்டும் ஒன்றுகூடி கிராமணியாரவர்களை நேற்று (22-4-23) வெகு ஆடம்பரமாக வரவேற்றார்கள். அவ்வமயம் அருப்புக்கோட்டை ஸ்ரீமான் செ. ப. உலகநாத நாடாரவர்கள் அக்கிராசனம் வகித்தனர். ஏறக்குறைய வாலிபரும் வயோதிகருமாக சுமார் 350-பேர் குழுமியிருந்தனர். கூட்டம் குறிப்பிட்ட காலத்தில் அதற்கென்று வாடகைக்கு எடுக்கப்பட்ட குமாரவீதி ரு. ம. கிட்டங்கியில் நடைபெற்றது நீண்டகர கோஷத்தினிடையே அக்கிராசனர் பின்வருமாறு பிரசங்கித்தனர்:—

நமது க்ஷத்திரிய மித்திரன் சென்னையில் தண்டையார்பேட்டையில் தாண்டவராயகிராமணி வீதியில் த. விஜயதுரைசாமி கிராமணியாரவர்கள் இல்லத்தில் செனித்து வயதோ நான்காக

வில்லை. இந க்ஷத்திரிய நாடார்களுக்கும் கிரா மணிகளுக்கும் செய்த வேலையோ அளவிடமுடி யாது. வந்தெதிர்த்த போலி வித்துவான்களை யும், நூல் புரட்டிய மடையர்களையும், நாடார் கிராமணிகள் க்ஷத்திரிய ரல்லவென்று சாதித்த சண்டாளர்களையும், முன்னொருக்கால் கமுதிக் கேசில் பொய்ச்சாக்ஷி புகன்று பொழுது போக் கிய முண்டங்களையும், பலசாஸ்திர சவுக்காலடித்து அவர்கள்பால் ஏறியிருக்கும் அந்தகாரத் தைப் போக்கி, நன்மதிபுகட்டி நாம் சான்றோர் குல க்ஷத்திரியரென நிலைநாட்டிய நமதுகுல சிமுச்சிங்கம் பத்திராசிரியருக்கு நாம் ஜீவிய சந் நாதாரராகவும், போஷகர்களாகவும், ரக்ஷகர்களா கவும்; முன்வரவேண்டும். நம்மவர்களுக்காக அவர்கள் சுமார் பதினாயிரம் ரூபாய்க்கு பல பாஷை நூல் வாங்கி பார்வையிட்டு சான்றாரின் மருவு சாணர்என 88-வருடத்திற்கு முற்பட்ட நூல்களில் இருக்குமாகில் எமது சாத்திர மீசை யை சிரைத்து பேடியென வெளிப்படுவோம். என்று சபதம்செய்த மஹானுக்கு இந்தமாத சஞ்சிகைக்கு ஸ்டாம்பு வாங்கவும், சிலோன் பிர யாணசெலவிற்கும் அருப்புக்கோட்டை எனது ஆப்தநண்பர் சூ. ஆ. முத்து நாடாரவர்கள் இனாமாக ரூ. 50 கொடுத்துதவினார்க ளென்றால் நாமினிச் சொல்வதென்ன?

இன்னவர் பத்திரிகைக்குச் சந்தாவோ 1150 இதில் 150-ஜமீன்தாரவர்களுக்கும், வித்துவான் மடாதிபதி பத்திரிக்காசிரியர்களுக்கும் இனா மாக அனுப்பிவிடுகிறார். மீதி ஆயிரத்திலோ ஆங்காங்குள்ள அபிமானிகளின் ஒத்தாசை யின்றி வி. பி. திரும்புவதையும் பார்க்கிறோம். இவ்விதமிருப்பதால் க்ஷத்திரிய மித்திரனுக்கு ஆபத்துவராது நம்மவர்க்கு இதற்கு முன்னர் அநேக பத்திரிகைகளிருந்தும் பொருளுதவியில் லாது ஒழிந்துபோய்விட்டன. தற்சமயமோர் நம் முன்னோர்கள் செய்த தவப்பயனால் க்ஷத்திரிய மித்திரன், நாடார்குல மித்திரன், நாடார் நண் பன், பாண்டியகுல தீபம் முதலானவை பிரகா சித்து வருகின்றன. இதில் நாடார்குல மித்தி ரன் சுகமாய்வாழ சிலோன் இரங்கூன் நாடார் கனவான்கள் ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். அதேமாதிரி நமது க்ஷத்திரிய மித்திரனையும் சிரஞ்சீவியாக்க சிலோன் நாடார் கனவான்க ளும் இரங்கூன் நாடார் கனவான்களும் தியாக க்ஷத்திரிய குணத்தைக் காட்டுவார்க ளென்ப தற்கு ஐயமில்லை. என்று முடித்தார்கள். பின்பு நாடார் மகாஜன சங்கத்திற்கு அங்கத்தின ராய்ச் சேரவேண்டுமென்றும் ராஜா தேவவரம் நாடார் கைத்தொழில்சாலை பல விடங்களிலும் ஸ்தாபிக்கப்பட இந்த 9-வது கான்பரன்ஸு தீர் மானஞ் செய்யவேண்டு மென்றும் இந்திய க்ஷத் திரியகுல நாடார் சங்கம் தனது முன்னிலைமை யான நன்னிலைமைக்கு வரவேண்டுமென்றும் உபந்நியாசித்தார்கள்.

கிராமணியவர்களை ஸ்ரீமான்களான சி. பொ. ம. ஏசுவடிய நாடாரவர்களும், பா. சி. இரத்தின பாண்டியரும், கே. கலியாணசுந்தர நாடாரவர் களும் அறிமுகஞ்செய்து வைத்தார்கள். லோக மான்ய திலகர் இந்தியருக்கொரு திலகமாயிருப் பதுபோல நாடார்களுக்கு கிராமணியவர்கள் செய்த வேலையையிட்டு 'நாடார்குல திலகர்' என்று நாமகரணஞ் சூட்டினர். நமது அதிபர் நியாயம் என்னும் தண்டாயுதத்தைப் பிடித் திருப்பதால் என்றும் வெற்றிபெருவர் என் றும் கூறினர். அநேக 'குதர்க்க குஞ்சரங்கள்' கூத்தாடுவதையும் பாண்டியரவர்கள் எடுத்துக் காட்டி அவைகளை யெல்லாம் அடக்க விஜயன் அவதரித்தார் என்பதையும் குறிப்பிட்டார். பின்பு கிராமணியவர்கள் நீண்ட கரகோஷங் களுக்கிடையே எழுந்திருந்து ம. து. தா, சி. பொ. ம. வென்ற இரு முதலாளிகளுக்கும் கப் பலிலிருந்து வந்திறங்கின நாள்முதல் தங்களை சவரக்ஷணை செய்து வருவதற்காக நன்றிகூறி ,'ஒற்றுமை', என்னும் விஷயத்தைப் பற்றிப் பேசினார்கள். முன்இந்த சங்கத்தார் நாடார்குல மித்திரன் பத்திராதிபரின் முன் ஏற்றதீர்மானங்

கள் நிறைவேறவில்லை யென்றும், இனி அவ் விதம் செய்யக்கூடாதென்றும் சொல்லி ஒற்றுமை என்னும் ஆயுதம் நமது ஜனசமூக முன்னேற்றத்திற்கு முதன்மையாக விருக்கவேண்டுமென்றுசொல்லி கீழ்கண்ட தீர்மானங்களையும் நிறைவேற்றி வைத்தனர்.

1. நாடார்களுக்குள்ளிருக்கும் மாறாத இராஜ விசுவாசத்தை அரசர் பெருமானுக்கு இம்மகாநாடு சமர்ப்பிக்கிறது.

2. இந்திய க்ஷத்திரியகுல நாடார் சங்கத்தை மதுரை நாடார் மகாஜன சங்கத்துடன் ரிஜிஸ்டர் செய்துவிடும்படி பிரசிடெண்டுக்கு அதிகாரங் கொடுப்பதாக இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

3. சங்கத்திற்கு வரவேண்டிய பணங்களை நாளது மேமீ 15வக்குள் துரிதமாய் வசூலித்து தொகை வசூலானஉடன் மேமீ 15உ மீட்டிங் தீர்மானப்படி க்ஷேமிக்கவும் பிரஸிடெண்டுகளுக்கு இம்மகாநாடு அதிகாரங் கொடுக்கிறது.

4. சீர்திருத்தத்தின்படி சங்கத்திற்கு ஸ்ரீமான் ம. து. தா. சிவனடிய நாடாரவர்கள் பிரஸிடெண்டாகவும், ஸ்ரீமான் சி. பொ. ம. ஏசுவடியா நாடாரவர்கள் வைஸ் பிரஸிடெண்டாகவும் ஸ்ரீமான் கெ. கலியாணசுந்தர நாடார் காரியதரிசியாகவு மிருக்க இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

5. மேமீ 15உ மீட்டிங்கில் பணவசூல் முடிவுபெறுமாகையால் அதுவரையில் சி. பொ. ம. வையே பொக்கிஷதாராக வைக்க இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

6. ஒவ்வொரு மாதமும் 15உயில் மாதாந்தர மீட்டிங் கூடவேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

7. பிரஸிடெண்டுகள் சங்கத்திற்கு வரவேண்டிய பணத்தை வசூலித்து மேமீ 15-ம் தேதி மீட்டிங் மேஜையில் ஆஜாசெய்ய வேண்டுமென இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

8. சங்கத்தில் பணம் வாங்கிய நபர்களில் யாவரேனும் மேமீ 15-தேதிக்குள் பணத்தை வட்டியுடன் செலுத்தத்தவறினால் கோர்ட்டு மூலம் நடபடிக்கையெடுத்து உடனே பணத்தை வசூலிக்குமாறு பிரஸிடெண்டுகளுக்கு இம்மகாநாடு அதிகாரங் கொடுக்கிறது.

9. நம் இந்திய க்ஷத்திரியகுல நாடார் சங்க நிதியிலிருந்து நம் க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்பு நிதி'' க்கு நன்கொடையாக ரூ. 300 கொடுக்கும்படி இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

இக்கடைசி தீர்மானத்தில் சபையோர் அதிக ஊக்கங்காட்டினர் முதலில் நூறுரூபாய் கொடுக்க வேண்டுமென்றும் பின்பு ரூ. 250 கொடுக்க வேண்டுமென்றும் பின்பு ரூ. 300 கொடுக்க வேண்டுமென்றும் போட்டியில் தொகை உயர்ந்ததால் சபையோர் இன்னு மதிகமாய் குதூகல மடைந்தனர். இத்தீர்மானம் ஸ்ரீமான், ம. து. தா. சிவனடிய நாடாரவர்களால் பிரேரிக்கப்பட்டு, ஸ்ரீமான்களான T. G. பொன்னுசாமி நாடார் ஞா. பா. வேதநாயக நாடார் S. S. பொன்னைய நாடார் முதலியவர்களால் கரகோஷத்தினிடையே உறுதிசெய்யப்பட்டது. இதற்குப் பின்னர் கிராமணியவர்கள் நூலாதாரத்தைக்கொண்டு 'நமது நிலைமை' என்பதின் பால் ஒரு பெருஞ் சொற்பெருக்கு நிகழ்த்தினார்கள். சபையோர் விடுத்த அநேக வினாக்களுக்கு கிராமணியவர்கள் தகுந்த விடையளித்த பின்னர் கூட்டம் வந்தனோபசாரத்துடன் முற்றுப்பெற்றது.

## குறுநிலமன்னர் ஆராய்ச்சி.

("க்ஷத்திரியன்" பத்திராதிபர், சேலம்.)

இவ்விஷயமாய் நியாயவாதி என்பார்க்கும் க்ஷத்ரிய மித்திரன் ஆசிரியர் விஜயதுரைசாமி கிராமணிக்கும் நீண்டகால விவாதம் நிகழ்ந்தது. விவாதங்கள் வன்னிகுல மித்திரனிலும் க்ஷத்ரிய மித்திரனிலும் நடைபெற்றன. வன்னிகுல மித்திரன் ஆசிரியர் இவ்விவாதத்தில் இஷ்டமில்லாதவராய் நியாயவாதியின் நிருபங்களைப் பிரசுரிக்காமல் புறக்கணித்து விட்டார். அதனால் க்ஷத்ரிய மித்திரனில் சான்றார்குல நிருபர்கள் வெற்றியடைந்தது போல் வீண் ஆரவாரஞ் செய்தும் நியாயவாதியை யிகழ்ந்தும் எழுதி வருகின்றனர். நமது க்ஷத்திரியனில் நியாயவாதிக்கு நாம் இடம்கொடுப்போம். நியாயமும் தர்மமுமே நமது மதம். அடுத்த பிரசுரம் முதல் நியாயவாதநிருபர் தமது வாதத்தை ஆரம்பிப்பாராக. க்ஷத்ரிய மித்திரன் ஆசிரியரும் அதனை யேற்றுத் தக்கவிடை யளிப்பாராக. அல்லது விஜவுதலேனும் செய்வாராக. வாதமட்டும் நீதமாயிருத்தல் வேண்டும். ஜல்ப, விதண்டை வழிகளிற் சாரலாகாது. சாஸ்திர சம்மதமின்றி இஷ்டம்போல் செய்யும் வாதத்தை யிழுத்து விசாரணையில் வைப்போம். தண்டமும் விதிப்போம். இஃது இருதரப்பாருக்கும் எச்சரிக்கை.

குறிப்பு:—இவர் கூறியாங்கு யாமும் நியாய வாதத்திற்கு எதிர்பார்க்கின்றேம். நிற்க, நியாயமும் தர்மும் நமது மதமென வெழுதிய நண்பர், தண்டமும் விதிப்போமெனுஞ் சொல்லெவ்வளவு சால்புடைத்தென்பதை யறியாது போயினர். அவர் மதப்படி நியாயமும் தர்மும் பிறழ்வாராயின் பூமியிலிறக்கப் படுவாரென்பதை யறிவாராக.

பத்திராதிபர்.

## க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்பு நிதி.

### இலங்கை வசூல்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | இந்திய க்ஷத்திரியகுல நாடார் சங்கம், இலங்கை ரூபா | 300 | 0 | 0 |
| ,, | சூ. ஆ. முத்து நாடார் அவர்கள் "நாடார்குல மித்திரன்" பத்திராதிபர், அருப்புக்கோட்டை ... | 100 | 0 | 0 |
| ,, | மெஸர்ஸ் சி. பொ. ம. பொன்னையநாடார் & பிரதர்ஸ், கொளம்பு | 100 | 0 | 0 |
| ,, | ம. து. தா. துரைசாமி நாடார் & பிரதர்ஸ், கொளம்பு | 100 | 0 | 0 |
| ,, | ரா. ம. அ. ஆறுமுக நாடார் அவர்கள் சிறுநாடார் குடியிருப்பு | 100 | 0 | 0 |
| ,, | சு. க. மா. கா. ரா. நாராயண நாடார் & Co., கொளம்பு | 100 | 0 | 0 |
| ,, | வே. சு. வே. சுடலைமாட நாடார், சிறுநாடார் குடியிருப்பு } | 100 | 0 | 0 |
| ,, | வே. சு. வே. வெள்ளைய நாடார், பள்ளிக்குறிச்சி } | | | |
| ,, | இ. ஒ. சு. கு. சுடலைமாட நாடார், சிறுநாடார் குடியிருப்பு | 100 | 0 | 0 |
| ,, | க. பி. கெ. கலியாணசுந்தர நாடார், கச்சினைவிளை | 50 | 0 | 0 |
| ,, | பெ. குலசேகரப்பெருமாள் நாடார், சிறுநாடார் குடியிருப்பு | 50 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | பா. பி. இராஜபாண்டிய நாடார், திருமலைப்பப்புரம் ... | 30 | 0 | 0 |
| ,, | வீர. துரைபாண்டிய நாடார், வாழைமடி ... | 30 | 0 | 0 |
| ,, | ஞா. பா. வேதநாயக நாடார், ஆவரைக்குளம் ... | 30 | 0 | 0 |
| ,, | பெ. ப. சி. பரமகுரு நாடார், சோனகன்விளை ... | 30 | 0 | 0 |
| ,, | சி. வ. வயிரவநாத நாடார், சுண்டன்கோட்டை ... | 15 | 0 | 0 |
| ,, | ஆ. மயிலேயா நாடார், குண்டல் ... | 15 | 0 | 0 |
| ,, | K. T. V. வியாகப்ப நாடார், வடக்கன்குளம் ... | 13 | 0 | 0 |
| ,, | P. S. அந்தோனிமுத்து நாடார், காவல்கிணறு ... | 13 | 0 | 0 |
| ,, | K. S. அந்தோனி நாடார், காவல்கிணறு ... | 10 | 0 | 0 |
| ,, | வெ. கிருஷ்ண நாடார், அச்சம்பாடு ... | 10 | 0 | 0 |
| ,, | ஜெயகாந்தி அம்மாள், சிவகாசி ... | 10 | 0 | 0 |
| ,, | சி. அ. அனந்தபெருமாள் நாடார், கச்சினாவிளை ... | 8 | 0 | 0 |
| ,, | V. M. ஞானப்பிரகாச நாடார், வடக்கன்குளம் ... | 8 | 0 | 0 |
| ,, | கி. மு. இ. அந்தோனிமுத்து நாடார், வடக்கன்குளம் ... | 8 | 0 | 0 |
| ,, | க. ம. தருமநாத நாடார், வடக்கன்குளம் ... | 8 | 0 | 0 |
| ,, | ஞா. குரூஸ் நாடார், வடக்கன்குளம் ... | 8 | 0 | 0 |
| ,, | வே. ஞானமுத்து நாடார், மாதேவன் குறிச்சி ... | 6 | 0 | 0 |
| ,, | கு. பெரிய நாடார், மாதேவன்குறிச்சி ... | 6 | 0 | 0 |
| ,, | மு. பொன்னுஸ்வாமி நாடார், படுக்கப்பத்து ... | 6 | 0 | 0 |
| ,, | செ. வியாகப்ப நாடார், ஏரல் ... | 6 | 0 | 0 |
| ,, | ந. வெள்ளைய நாடார், சுண்டன்கோட்டை ... | 6 | 0 | 0 |
| ,, | ஆ. இராஜமாணுவேல் நாடார், நுவரேலியா ... | 5 | 0 | 0 |
| ,, | T. K. மிக்கேல் நாடார், இராமலிங்கபுரம் ... | 5 | 0 | 0 |
| ,, | கி. மு. ம. மிக்கேல் அந்தோனி நாடார், வடக்கன்குளம் | 5 | 0 | 0 |
| ,, | பா. ஏ. சிலுவை நாடார், கள்ளிகுளம் ... | 5 | 0 | 0 |
| ,, | M. A. சந்தணமரிய நாடார், வடக்கன்குளம் ... | 5 | 0 | 0 |
| ,, | முத்து. ஞா. மிக்கேல் நாடார், வடக்கன்குளம் ... | 5 | 0 | 0 |
| ,, | S. T. சிலுவை நாடார், வடக்கன்குளம் ... | 5 | 0 | 0 |
| ,, | தோ. மா. தொம்மக்ரூஸ் நாடார், வடக்கன்குளம் ... | 5 | 0 | 0 |
| ,, | கி. மு. ம. மரிய அந்தோனி நாடார், வடக்கன்குளம் ... | 5 | 0 | 0 |
| ,, | சூ. சீனிவாசக நாடார், காவல்கிணறு ... | 5 | 0 | 0 |
| ,, | கா. கு, பேதுறு நாடார், அழகப்பபுரம் ... | 5 | 0 | 0 |
| ,, | தி, ராமசாமி நாடார், விஜயராமபுரம் ... | 5 | 0 | 0 |
| ,, | கா. சி. ற. தேவசகாய நாடார், கள்ளிக்குளம் ... | 3 | 0 | 0 |
| ,, | ம. அன்புடைய நாடார், காவல்கிணறு ... | 3 | 0 | 0 |
| ,, | மலை. இ. தேவசகாய நாடார், வடக்கன்குளம் ... | 3 | 0 | 0 |
| ,, | சி. கூ. சவரிமுத்து நாடார், வடக்கன்குளம் ... | 3 | 0 | 0 |
| ,, | மி. மரிய அந்தோனி நாடார், வடக்கன்குளம் ... | 3 | 0 | 0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | மு. தே. அருள்ராய நாடார், வடக்கன்குளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | வீ. மா. சூசைமரிய நாடார், வடக்கன்குளம | ... | 3 | 0 | 0 |
| ,, | M. E. ஞானப்பிரகாச நாடார், வடக்கன்குளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | ஞா. முத்து நாடார், காவல்கிணறு | ... | 3 | 0 | 0 |
| ,, | தேவ. ஞா. வியாகப்ப நாடார், காவல்கிணறு | ... | 3 | 0 | 0 |
| ,, | கோ. மா. அமிர்த நாடார், காவல்கிணறு | ... | 3 | 0 | 0 |
| ,, | S. இராஜேந்திர நாடார், தென்காசி | ... | 3 | 0 | 0 |
| ,, | S. மரியராஜ் நாடார், பண்டாரபுரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | V. M. மிக்கேல் நாடார், வடக்கன்குளம் | ... | 2 | 0 | 0 |
| ,, | கி. மு. இ. மிக்கேல் நாடார், வடக்கன்குளம் | ... | 2 | 0 | 0 |
| ,, | க. மி. ஏசுவடிய நாடார், வடக்கன்குளம் | ... | 2 | 0 | 0 |
| ,, | சே. அ. மலையப்ப நாடார், வடக்கன்குளம் | ... | 2 | 0 | 0 |
| ,, | சு. க. பொன்னையா நாடார், தளவாபுரம் | ... | 2 | 0 | 0 |

மொத்த ரூபா ... 1494—0—0

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 262-ம் நெம்பர் முன்கூடியது | ரூபா | 1494 | 0 | 0 |
| ஸ்ரீமான், | A. E. ஆபிரகாம் நாடாரவர்கள், காலி (அடையல்) | ரூபா | 100 | 0 | 0 |
| ,, | P. S. S. K. சிதம்பர நாடாரவர்கள், இரத்தினபுரி (உடைப்பு குடியிருப்பு) | | 50 | 0 | 0 |
| ,, | S. தேவாசிர்வாத நாடாரவர்கள், செவந்தபுரம் (Karapincha) | | 50 | 0 | 0 |
| ,, | D. S. பவர் நாடாரவர்கள், சுவிசேஷபுரம், (Palm Parden Estate) | | 50 | 0 | 0 |
| ,, | தெ. ஞா. பாக்கியநாத நாடாரவர்கள், சோனகன்விளை | | 50 | 0 | 0 |
| ,, | வீ. விரபத்திர நாடாரவர்கள், இரத்தினபுரி (தனிமலை எஸ்டேட்) | | 50 | 0 | 0 |
| ,, | S. டேவிட் நாடாரவர்கள், துத்திகுளம் (Madampe Estate) | | 30 | 0 | 0 |
| ,, | A. R. P. முத்து நாடாரவர்கள் அகப்பைகுளம் | | 30 | 0 | 0 |
| ,, | V. J. ஆர்தர் நாடாரவர்கள், டால்வின் ஸ்டேட் | | 0 | 0 | 0 |
| ,, | பெ. ரூ. ம. க. பேர்பெற்ற நாடாரவர்கள் பிரகாசபுரம் | | 30 | 0 | 0 |
| ,, | S. S. பொன்னையா நாடாரவர்கள், சந்தையடியூர் உடன்குடி | | 31 | 0 | 0 |
| ,, | மா. பெரிய நாடாரவர்கள், கச்சினுவிளை | ... | 30 | 0 | 0 |
| ,, | செ. ம. ஏசுதாஸ் நாடாரவர்கள், கல்விளை | ... | 30 | 0 | 0 |
| ,, | ச. வெ. சுந்தர நாடாரவர்கள், கச்சினுவிளை | ... | 30 | 0 | 0 |
| ,, | ஞா. பா. தங்கையா நாடார், கச்சினுவிளை | ... | 30 | 0 | 0 |
| ,, | நா. முத்து நாடார், கச்சினுவிளை | ... | 30 | 0 | 0 |
| ,, | க. வே. அ. தங்கையா நாடார், சோனகன்விளை | ... | 30 | 0 | 0 |
| ,, | ரு. நா. ஷண்முக நாடார், கீழநாலுமாவடி | ... | 30 | 0 | 0 |
| ,, | ஈ. தானியேல் நாடார், வெள்ளாளன்விளை | ... | 30 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | பா. சு. பண்டார நாடார், நாதன்கிணறு ... | 30 | 0 | 0 |
| ,, | வ. மா. வழந்தான்புலவர் நாடார், ராஜமான்யபுரம் ... | 30 | 0 | 0 |
| ,, | சோ. சு. ப. தங்கையா நாடார், லக்ஷ்மியாநகரம், ஆறுமுகநேரி | 30 | 0 | 0 |
| ,, | சி. அணைந்தபெருமாள் நாடார், கச்சினுவிளை அனுருதபுரம் | 30 | 0 | 0 |
| ,, | உறவின்முறை நாடார்கள், நீர்கொழும்பு ... | 30 | 0 | 0 |
| ,, | சாலி. உறவின்முறை நாடார்கள், (அடையல் முதலூர்) | 25 | 0 | 0 |
| ,, | சாலி 104-ம் நெ. வீடு உறவின்முறை நாடார்கள் ... | 25 | 0 | 0 |
| ,, | ஏறல், பு. வீ. புதுமை நாடார், (புத்தக விற்பனை) ... | 18 | 0 | 0 |
| ,, | வ. கிருஷ்ணமுத்து நாடார், சுண்டன்கோட்டை, பாணந்துறை | 13 | 0 | 0 |
| ,, | P. I. S. S. ஐயங்கண் நாடார், பேய்க்குளம், பாணந்துறை | 13 | 0 | 0 |
| ,, | சி. சு. சுப்பையா நாடார், பேய்க்குளம், பாணந்துறை ... | 13 | 0 | 0 |
| ,, | போ. சாமி நாடார், பணிக்க நாடார், குடியிருப்பு ... | 13 | 0 | 0 |
| ,, | பி. அ. த. வெ. வெள்ளைய நாடார், பிரகாசபுரம் ... | 10 | 0 | 0 |
| ,, | கா. ஐயாக்குட்டி நாடார், பணிக்க நாடார், குடியிருப்பு | 10 | 0 | 0 |
| ,, | சா. திருமால் நாடார், தேரிக்குடியிருப்பு ... | 10 | 0 | 0 |
| ,, | ச. கிருஷ்ண நாடார், நாதன்கிணர் ... | 10 | 0 | 0 |
| ,, | பெ. ஜெபமணி நாடார், மணியங்குடி ... | 10 | 0 | 0 |
| ,, | பூ. யோ. ஜெபமணி நாடார், சோனகன்விளை ... | 10 | 0 | 0 |
| ,, | ஞா. பொன்னையா நாடார், எருஸலேம், அம்பலாங்கொடை * | 10 | 0 | 0 |
| ,, | K-S. துரைப்பாண்டியநாடார், மூக்குப்பீறி, அம்பலாங்கொடை * | 10 | 0 | 0 |
| ,, | பி. வே. பொன்னைய நாடார், எருஸலேம் ... | 8 | 0 | 0 |
| ,, | பெ. பி. நாராயண நாடார், ராஜமன்யபுரம் ... | 8 | 0 | 0 |
| ,, | பா. ஏசுதாஸன் நாடார், சுப்ரமண்யபுரம் (ஆறுமுகநேரி) | 8 | 0 | 0 |
| ,, | A. T. இராஜமணி நாடார், பிரகாசபுரம் ... | 8 | 0 | 0 |
| ,, | ஆ. ராமஸ்வாமி நாடார் குரங்கணியூர் ... | 6 | 0 | 0 |
| ,, | செ. ஆறுமுகம் சேர்வை, மாதேவன்குறிச்சி ... | 5 | 0 | 0 |
| ,, | அ. ஞானமாலை நாடார், மூக்குப்பீறி ... | 5 | 0 | 0 |
| ,, | ப. தெ. பொன்னைய நாடார், மூக்குப்பீறி, அம்பலாங்கொடை | 5 | 0 | 0 |
| ,, | சா. கோ. தாவீது நாடார், எருஸலேம் ... | 5 | 0 | 0 |
| ,, | கோ. வே. தங்கைய நாடார், பிள்ளையன்மனை ... | 5 | 0 | 0 |
| ,, | ந. பாக்கியநாத நாடார், களுத்துறை ... | 5 | 0 | 0 |
| ,, | சி. க. ஞா. சாமுவேல் நாடார், பாணந்துறை ... | 5 | 0 | 0 |
| ,, | P. P. பிரமையா நாடார், பேய்க்குளம், பாணந்துறை ... | 5 | 0 | 0 |
| ,, | G. இப்ராஹீம் மரைசே நாடார், அகிலாண்டபுரம் ... | 5 | 0 | 0 |
| ,, | தி. தங்கவேல் நாடார், பிறைகுடியிருப்பு, இரத்தினபுரி | 5 | 0 | 0 |
| ,, | ஞானபரண நாடார், Rangalla Estate ... | 5 | 0 | 0 |
| ,, | தா. யோ. ஏசுவடிய நாடார், முதலூர், புதூர் ... | 5 | 0 | 0 |
| ,, | P. தேவசகாயம் நாடார், Alupolla Estate ... | 5 | 0 | 0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | S. P. ஞானம் நாடார், (Madampe Eestate) | ... | 5 | 0 | 0 |
| ,, | ச. இராமஸ்வாமி நாடார், உடைப்புகுடியிருப்பு | ... | 5 | 0 | 0 |
| ,, | ப. சி. வெ. வேதநாயக நாடார், உடையார்குளம் | ... | 4 | 0 | 0 |
| ,, | அ. ஷண்முகவேல் நாடார், வேப்பங்காடு | ... | 4 | 0 | 0 |
| ,, | S. திரவியம் நாடார், Alupolla Estate | ... | 4 | 0 | 0 |
| ,, | S. வேதமாணிக்க நாடார், கட்டயாலங்குளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | சு. மாயாண்டி நாடார், பெருமாள்புரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | அ. ஈசாக்கு நாடார், பிள்ளையன்மனை, காலி | ... | 3 | 0 | 0 |
| ,, | பே. தேவாச்சரிய நாடார், அடையல் முதலூர், காலி | | 3 | 0 | 0 |
| ,, | அ. சி. செல்லையா நாடார், அடையல் முதலூர், காலி | | 3 | 0 | 0 |
| ,, | ஞா. பொன்னையா நாடார், அடையல் முதலூர், காலி | | 3 | 0 | 0 |
| ,, | யா. பரமானந்த நாடார், சாத்தன்குளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | ஜெ. பாண்டிய நாடார், அடையல் முதலூர் | ... | 3 | 0 | 0 |
| ,, | P. T. திரியேகதாஸ் நாடார், அடையல் முதலூர் | ... | 3 | 0 | 0 |
| ,, | ப. ம. தேவ இரக்கம் நாடார். மூக்குப்பீறி, அம்பலாங்கொடை | | 3 | 0 | 0 |
| ,, | சி. மோசே நாடார், மூக்குப்பீறி, அம்பலாங்கொடை | | 3 | 0 | 0 |
| ,, | க. மோ. கோவிற்பிள்ளை நாடார், மூக்குப்பீறி | ... | 3 | 0 | 0 |
| ,, | மு. வே. ஞானமணி நாடார், விண்டில்லா | ... | 3 | 0 | 0 |
| ,, | P. ஞானப்பிரகாச நாடார், ஓய்யான் குடியிருப்பு | ... | 3 | 0 | 0 |
| ,, | P. N. செபஸ்தியான் நாடார், அவிசாவெல்ல | ... | 3 | 2 | 5 |
| ,, | பெ. சு. சுப்பிரமணிய நாடார், கயிலாஸபுரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | M. D. சாமுவேல் நாடார், கொஸ்கொல்ல, எஸ்டேட் | ... | 3 | 0 | 0 |
| ,, | வே. அருமைநாயக நாடார், இரத்தினபுரி | ... | 3 | 0 | 0 |
| ,, | S. சுப்பிரமண்ய நாடார், அகப்பைகுளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | V. கந்தஸ்வாமி நாடார், உடைப்பிகுடியிருப்பு | ... | 3 | 0 | 0 |
| ,, | G. ற. தவமணி நாடார், பிள்ளையன்மனை | ... | 3 | 0 | 0 |
| ,, | ப. சண்முகம் சேர்வை, தச்சன்விளை | ... | 2 | 0 | 0 |
| ,, | அ. பாலையா சேர்வை, தச்சன்விளை | ... | 2 | 0 | 0 |
| ,, | சி. வெள்ளையா நாடார் குட்டித்தோட்டம் | ... | 2 | 0 | 0 |
| ,, | பிச்சை நாடார், ருவான்வெல்ல | ... | 2 | 0 | 0 |
| ,, | ஓ. தெருவாண்டி நாடார், ரூஜமன்யபுரம் | ... | 2 | 0 | 0 |
| ,, | க. மோ. கோ. மோசே நாடார், மூக்குப்பீறி | ... | 2 | 0 | 0 |
| ,, | ப. வீரமலைக்கோனார், விண்டில்லா | ... | 2 | 0 | 0 |
| ,, | ஒரு அபிமானி | ... | 2 | 0 | 0 |
| ,, | வெ. பொன்னுஸ்வாமி நாடார், சந்தையடியூர் | ... | 2 | 0 | 0 |
| ,, | G. செல்லையா நாடார், றக்வான | ... | 2 | 0 | 0 |
| ,, | S. முத்தையா நாடார், சுவிசேஷபுரம் | ... | 2 | 0 | 0 |
| ,, | G. சந்தோஷ நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | K. B. வேதமுத்து நாடார், பிள்ளையன்மனை | ... | 8 | 0 | 0 |
| ,, | G. சாமுவேல் நாடார், ஆலங்குளம் | ... | 8 | 0 | 0 |
| ,, | சோ. சுகமாலக்குட்டி நாடார், ஆறுமுகநேரி | ... | 8 | 0 | 0 |
| ,, | ச. வியாகப்ப நாடார், பிரகாசபுரம் | ... | 8 | 0 | 0 |
| ,, | பா. சா. சாலமோன் நாடார், பாட்டக்கரை | ... | 8 | 0 | 0 |
| ,, | பெ. சோமசுந்தரம் நாடார், கச்சினாவிளை | ... | 8 | 0 | 0 |
| ,, | சா. கவுதலமுத்து நாடார், பூச்சிக்காடு | ... | 8 | 0 | 0 |
| ,, | ஹென்றி. ஞானாயுத நாடார், ஆலங்குளம் | ... | 7 | 0 | 0 |
| ,, | ப. குருசுவாமி நாடார், பிறைகுடியிருப்பு | ... | 6 | 0 | 0 |
| ,, | பா. சா. பொன்னுஸ்வாமி நாடார், சாத்தன்குளம் | ... | 5 | 0 | 0 |
| ,, | சூ. அமிர்தமிக்கேல் நாடார், வடக்கன்குளம் | ... | 5 | 0 | 0 |
| ,, | G. சூசைமுத்து நாடார், தச்சன்மொழி | ... | 5 | 0 | 0 |
| ,, | ப. தங்கவேல் நாடார், தேரிவடலி | ... | 5 | 0 | 0 |
| ,, | ச. ம. தங்கைய நாடார், இடையன்விளை | ... | 5 | 0 | 0 |
| ,, | வெ. தவசிப்பிள்ளை நாடார், பூச்சிக்காடு | ... | 5 | 0 | 0 |
| ,, | தெ. ஆதிபாண்டிய நாடார், சோனகன்விளை | ... | 5 | 0 | 0 |
| ,, | தெ. நாராயண நாடார், வெள்ளாளன்விளை | ... | 5 | 0 | 0 |
| ,, | ந. சு. ஏசுவடிய நாடார், கச்சினாவிளை | ... | 5 | 0 | 0 |
| ,, | ப. சுடலைமுத்து நாடார், முத்துகிருஷ்ணபுரம், ஆறுமுகநேரி | | 5 | 0 | 0 |
| ,, | ஐ. பி. கணேஷன் நாடார், மேலத்தெரு, காயாமொழி | ... | 5 | 0 | 0 |
| ,, | பெ. பா. இராஜமணி நாடார், கொச்சிகடை | ... | 5 | 0 | 0 |
| ,, | ந. வெ. தா. நல்லமுத்து நாடார், மூக்குப்பீரி | ... | 5 | 0 | 0 |
| ,, | N. சுவாமிதாஸ நாடார், காப்பிஞ்சா எஸ்டேட் | ... | 3 | 0 | 0 |
| ,, | R. M. ஜோஸப் நாடார், ஷை | ... | 3 | 0 | 0 |
| ,, | சா. குருஸ்வாமி நாடார், இரத்தினபுரி | ... | 3 | 0 | 0 |
| ,, | பெ. முத்தையா நாடார், பண்டாரபுரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | இ. கருப்பையா நாடார், உடைப்புகுடியிருப்பு | ... | 3 | 0 | 0 |
| ,, | இ. நல்லதம்பி நாடார், இராமசுவாமிபுரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | இரத்தினருசிபவர் நாடார், சுவிசேஷபுரம் | ... | 3 | 0 | 0 |
| ,, | P. S. ஏசுவடிய நாடார், பிள்ளையன்மனை | ... | 3 | 0 | 0 |
| ,, | S. V. மோஸஸ் நாடார், பூவாக்பிற்றி | ... | 3 | 0 | 0 |
| ,, | வ. வே. வெள்ளையா நாடார், பாதுக்கை | ... | 3 | 0 | 0 |
| ,, | வி. தேவ இரக்க நாடார், பாட்டக்கரை | ... | 3 | 0 | 0 |
| ,, | ஞா. பா. ஞானையா நாடார், கச்சினாவிளை | ... | 3 | 0 | 0 |
| ,, | ந. கோ. தேவ இரக்க நாடார், நாலுமாவடி | ... | 3 | 0 | 0 |
| ,, | ஆ. கோவில்பிள்ளை நாடார், கச்சினாவிளை | ... | 3 | 0 | 0 |
| ,, | மா. ரா. அழகுமுத்து நாடார், மேல்சடையான்குளம் | ... | 3 | 0 | 0 |
| ,, | இலந்தடிய நாடார், பரமன்குறிச்சி | ... | 3 | 0 | 0 |
| ,, | சி. ஆறுமுகப்பெருமாள் நாடார், கச்சினாவிளை | ... | 3 | 0 | 0 |
| ,, | பி. கணபதி நாடார், தேக்குதோட்டம் | ... | 3 | 0 | 0 |
| ,, | ஏ. சாமுவேல் நாடார், கொச்சிகடை | ... | 3 | 0 | 0 |
| ,, | அ. பலவேசமுத்து நாடார், நீர்கொழும்பு | ... | 3 | 0 | 0 |
| ,, | சோ. பா. ராமலிங்க நாடார், மணச்சேனை | ... | 3 | 0 | 0 |
| ,, | பி. தாவீது நாடார், கொச்சிகடை | ... | 3 | 0 | 0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீமான், | S. R. வேலுக்கண் நாடார், கொச்சிகடை | ... | 3 | 0 | 0 |
| ,, | வே. ஆபிரகாம் நாடார், மணியங்குடி | ... | 3 | 0 | 0 |
| ,, | கா. ஞா. தாஸன் நாடார், சோனகன்விளை | ... | 3 | 0 | 0 |
| ,, | வி. அருமைநாயக நாடார், கொச்சிகடை | ... | 3 | 0 | 0 |
| ,, | ஜே. எஸ். நல்லதம்பி நாடார், நீர்கொழும்பு | ... | 3 | 0 | 0 |
| ,, | பெ. தானியேல் நாடார், தேக்குத்தோட்டம் | ... | 3 | 0 | 0 |
| ,, | யோ. குருபாதம் நாடார், கொச்சிகடை | ... | 3 | 0 | 0 |
| ,, | பி. ச. ஏசுவடிய நாடார், மூக்குப்பீரி | ... | 3 | 0 | 0 |
| ,, | G. ஆனந்த நாடார், இடையன்குடி | ... | 2 | 0 | 0 |
| ,, | முனியப்ப நாடார், கரப்பிஞ்சா எஸ்டேட் | ... | 2 | 0 | 0 |
| ,, | மாரிமுத்து நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | சுப்பையா நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | இராமையா நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | R. முத்தையா நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | சிலுவைமுத்து நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | பவுல் சுவாமியடிய நாடார், ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | திரு. சுவாமிநாத நாடார், சுவிசேஷபுரம் | ... | 2 | 0 | 0 |
| ,, | M. டேவிட் நாடார், இரத்தினபுரி | ... | 2 | 0 | 0 |
| ,, | ரு. செண்பகலிங்க நாடார், தச்சன்மொழி | ... | 2 | 0 | 0 |
| ,, | V. S. சிவசங்கரக்குமார் நாடார், வாழையடி | ... | 2 | 0 | 0 |
| ,, | ரு. ஆதிநாராயண நாடார், சுப்பராயபுரம், அவிசாவல்ல | | 2 | 0 | 0 |
| ,, | க. ஆத்திக்கண் நாடார், ஷை ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | ஆ. கு. முத்து நாடார், ஷை ஷை | ... | 2 | 0 | 0 |
| ,, | நா. மா. ஷண்முக நாடார், நாதன்கிணறு | ... | 2 | 0 | 0 |
| ,, | மோ. தேவதாஸன் நாடார், கல்விளை | ... | 2 | 0 | 0 |
| ,, | சு. தருமலிங்கம் நாடார், ஆ. முத்துகிருஷ்ணபுரம் | ... | 2 | 0 | 0 |
| ,, | சு. அ. வேலாயுத நாடார், விண்டுல்லா | ... | 1 | 0 | 0 |
| ,, | மு. அ. மோஸஸ் நாடார், விண்டுல்லா | ... | 1 | 0 | 0 |
| ,, | பா. தங்கையா நாடார், விண்டுல்லா | ... | 1 | 0 | 0 |
| , | ஞா. சாமுவேல் நாடா, ருவான்வெல்ல | ... | 1 | 0 | 0 |
| ,, | கோ. பொன்னையா நாடார், ருவான்வெல்ல | ... | 1 | 0 | 0 |
| ,, | ரு. ஆதிநாருயண நாடார், ருவான்வெல்ல | ... | 1 | 0 | 0 |
| ,, | ஆ. ஆத்திப்பண்டிதன் | ... | 1 | 0 | 0 |
| ,, | க. பெருமாள் நாடார், இராஜமன்யபுரம் | ... | 1 | 0 | 0 |
| | ஆகமொத்தம் ரூபா | ... | 3062—2—5 | | |

குறிப்பு:—கொளும்பு நகரைச்சேர்ந்த முகத்துவாரம், பால்பட்டி, கொள்ளுப்பிற்றி, கும்பனித்தெரு முதலிய விடங்களிலும், மொறட்டுவ, கண்டி, டிக்கோயா, நூவரேலியா, முதலிய நாட்டுப்பகுதிகளிலுமுள்ள கனம் உறவின்முறை நாடார்களை ஜூன்மீ 3உ முதல் 15உ வரை சந்திக்கலாமெனத் தீர்மானித்திருக்கிறோம். அப்பகுதி அபிமானிகளும் மித்திரன் பாதுகாப்புநிதியைத் தருந்தவாறு ஆதரிப்பீர்களென நம்புகிறோம்.

---

* இவ்விருகனவான்களும் பாக்கி ரூபாய் இருபது மனுப்பி ஜீவிய சந்தாதாரராய் சேர்வதாக வாக்களித்துள்ளார்கள். மேலே நன்கொடை உதவிய கனவான்களில் விருப்பமுடையோர் பாக்கியைச் செலுத்தி ஜீவிய சந்தாதாரராகவோ போஷகராகவோ சேர்ந்துகொள்ளலாம்.

"க்ஷத்திரிய மித்திரன்" பத்திராதிபர்,
ஸ்ரீமான், த. விஜயதுரைசாமி கிராமணியாரவர்களுக்கு
(வெண்ணப்பொ) கொளுஞ்சியடி நாடார்கள் வாசித்துக்கொடுத்த

## உபசாரப் பத்திரம்.

அன்புமிக்க ஐயா!

தாங்கள் குபேர நாடாகிய இவ்விலங்காதீபத்தின்கண் விஜயமாகியர்களே இங்குள்ள நாடார் ஜன சமூகங்களுக்கெல்லா மோர் சுபநாளாகக் கருதப்படும், ஆங்காங்கே நமது ஜனங்கள் வேண்டுகோட்கிணங்கி அவர்கள்பால் அன்பு கொண்டு சிரமம் பாராட்டாது விஜயம்செய்து கவுரவித்ததுபோல் எங்கள் வேண்டுகோளையும் அங்கீகரித்து எங்களைக் கனப்படுத்திய தங்களது பேரன்பை நாங்கள் என்றும் போற்றுவோமாக. தங்கள் வரவு நல்வரவாகுக.

க்ஷத்திரிய மித்திராதிப!

க்ஷத்திரிய மித்திரன் என்னும் பத்திரிகையை நடத்தி அதன்மூலம் க்ஷத்திரிய மரபைப் பிரகாசிக்கச்செய்துவரும் தங்களது தியாகம் இந்நிலவுலகில் மிகவும் கொண்டாடத்தக்கதே. ஆழ்ந்துபோன ஓர் ஜாதியைமீண்டும் தூக்கிநிலைநிருத்துவான்வேண்டி பகவானே திருவவதாரம் செய்வாரென சொல்லுவதற்கிணங்க தாங்கள் நமது ஜனசமூகத்தில் ஓர் அவதாரபுருடராயவதரித்து உடல், பொருள், ஆவி மூன்றையும் குலசேவைக்காக தத்தம்செய்து உழைத்துவரும் ஆற்றலைப் பாராட்டி கடவுளைப் பிரார்த்திக்கின்றோம். யாவத்திற்கும் காரணரான கடவுள் உங்களுக்கு நீடிய ஆயுளையும் போதிய திடகாத்திரத்தையும் வேண்டிய ஜெயத்தையும் தந்து இரட்சிப்பாராக.

சூரியகுலமணியே!

ஜீவியார்த்தத்தின் பொருட்டு நாங்கள் தாய் நாடு விட்டு இங்ஙன் வந்து ஒவ்வோர் வர்த்தகங்களில் புகுந்து செய்துவரும் இடத்தில் தங்களை மிகவும் கவுரவமாக வரவேற்றுபசரிக்க வியலாததுபற்றி வருந்துகின்றோம். இப்பொழுது நாங்கள் செய்துள்ள இச்சிறு உபசாரத்தில் எவ்வித குறைவுபாடுக ளிருப்பினும் க்ஷமித்து ஏற்றருளியெங்களை கவுரவிப்பீர்களாக வேண்டுகின்றோம். "நன்றே யாயின் இன்றே செய்" என்றபடி நல்ல விஷயமாகியதும், நாடார்குலத்தை என்றும் மேன்மைப்படுத்தி உயர்த்தக் கூடியதுமாகிய "நாடார் என்னும் சொல்லாராய்ச்சி" நூலையும் தாங்கள் கூடியசுருக்கில் அரங்கேற்றம்செய்து எங்களை சந்தோஷிப்பிக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்வதோடு சிரமம் பாராட்டாது விஜயமாகியிருக்கும் குலாபிமானச்செல்வர் ஸ்ரீமான், அருப்புக்கோட்டை, செ. ப. உலகநாத நாடார் அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். இப்படிக்கு தங்களின் நீடியசுகவாழ்வை சதாவிரும்பும், வெண்ணப்பொ, கொழிஞ்சியடி நாடார்கள். (24-5-23)

---

இலங்கை, கட்டுநேரியில்

## க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபர் விஜயமும், உற்சாகமான வரவேற்பும்.

இலங்கை கட்டுநேரி (Wennappuwa Post) யிலுள்ள நாடார் கனவான்களின் வேண்டுகோட்கிசைந்து நமது க்ஷத்திரிய மித்திராதிபரவர்கள் 24-5-23 இரவு விஜயமானார்கள் (சிங்களக் கனவானை) ஸ்ரீமான், E. A. S. பெரோ அவர்கள் கட்டிடத்தில் அவர்கள் முன்னிலையில் ஓர் உபசாரக்கூட்டம் மிகவும் சிறப்பாய் நடைபெற்றது. அதிபரவர்களுக்கும் சகாக்களுக்கும்

தகுந்த மரியாதைகள் செய்யப் பட்டதோடு விருந்தும் செய்யப்பட்டு ஸ்ரீமான்களான ரூ. நா. ஷண்முக நாடார், ஈ. தானியேல் நாடார், மா. சு. பண்டார நாடார், வ. மா. வழுத்தான் புலவர் நாடார் முதலிய இன்னும் மற்றும் குலாபிமானிகளாலும் பாதுகாப்பு நிதிக்கு ஏற்ற விதமாய் தியாக குணமுடன் ஒவ்வொருவரும் கொடுத்தது மதிக்கத்தகுந்ததே. இச் சபையை முக்கியமாய் நமது நண்பர் ஸ்ரீமான், E. A. S. பெரேரா அவர்கள் ஊக்கமோடு முன்னின்று நடத்திவைத்த அன்பு தமிழ் நாட்டுசான்றோர் குலத்தவர்கள் மீது அவர்கள் கொண்டுள்ள அபிமானத்தைக் காட்டுகின்றதென்பதிற் றடையில்லை. இப் பகுதியிலுள்ள நாடார்கள் ஒற்றுமையுடன் ஏகோபித்து ஓர் மகமைச்சங்கம் ஸ்தாபித்து வளர்த்துவரவேண்டியது மிகவும் அவசியமாயிருக்கின்றதென்பதையும் கட்டுநேரி, கொழிஞ்சியடி, வெண்ணப்பொர, நயினமடம், தங்கொட்டுவ, ஆர்த்தாண்டுவான், கோனுவில, கிரிமிட்டியான் முதலிய இன்னும் அப் பகுதியிலுள்ள மற்றிடங்களிலுமிருக்கும் நாடார் சகோதரர்கள் அறிந்து கவனித்து அவ்வாறு சங்கமொன்று ஸ்தாபிக்க முன்வரவேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ஒரு நிருபர்.

---

"க்ஷத்திரிய மித்திரன்" பத்திராதிபரவர்களுக்கு
இலங்கை, கட்டுநேரி நாடார்கள் வாசித்துக்கொடுத்த

## உபசாரப் பத்திரம்.

அன்புடைச்செல்வ!

தாங்கள் எங்கள் வேண்டுகோட் கிசைந்து இவண் விஜயம்செய்துள்ள தங்களது அன்புகொண்டாடத்தக்கதே. பெருமையுடைய தாங்கள் அநேகமைல்கள் தூரமிருந்து இச்சிறு பகுதியாகிய எங்கள் ஊர்வந்து எங்களை மிகவும் சந்தோஷப் படுத்தியதானது எங்களுக்கு ரொம்பவும் கவுரவமே. இஃது நாங்கள் என்றும் மறக்கக் கூடியதன்று. குலதர்மத்தி லீடுபட்டு குலத்தை விளக்குவான் பொருட்டு தீபம்போல் வந்துதித்து க்ஷத்திரிய மித்திரன் என்னும் பத்திரிகையை நடப்பித்து நாடார்ஜன சமூகத்தைத் தட்டிஎழுப்பி ஒவ்வொருவருக்கும் க்ஷத்திரிய இரத்தம் பாவச்செய்துவரும் தங்களது முயற்சி சாலச்சிறந்ததே, இன்னும் நமது குலத்தின் மீது பிறர் கொண்டுள்ள தப்பபிப்பிராயங்களையும் போக்கி ஜனசமூகத்தை முன்னேற்றப் பாதையிற்கொண்டு விடுவீர்களென்பதிற் றடையின்று. கடவுள் உங்கள் நன்னோக்கத்திற்கு ஏற்றபடி அருள்புரிவாரென்று அவரை துதிக்கின்றோம்.

கண்ணியமுடைய தங்களுக்கு தற்போது செய்துள்ள இச்சிறு உபசாரத்தில் எவ்வித குற்றங்களிருப்பினும் க்ஷமித்து ஏற்று அங்கீகரிப்பீர்களாக. தங்கள் உண்மையுள்ள

கட்டுநேரி நாடார்கள்.

---

நீர்கொழும்பை சேர்ந்த கிரிமிட்டியானில்

## நமது க்ஷத்திரிய மித்திரன் அதிபரும், வரவேற்பு கூட்டமும்.

நாளது 29-5-23 ல் நமது க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபரவர்கள் இங்கு விஜயஞ்செய்தார்கள். அவர்களை உபசரிக்கும் வண்ணமாய் ஸ்ரீமான், பே. ஞா. பாக்கியநாத நாடாரவர்கள் அக்கிராசனத்தில் ஓர் பொதுகூட்டம் இரவு 9-30 மணியளவுக்கு ஆரம்பிக்கப்பட்டது. அதி

பரவர்களாலும், நண்பர் இரத்தினபாண்டியராலும் உபந்நியாசிக்கப்பட்டது. நாடார்கள் யாவரும் குதூகல மடைந்தார்கள். க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்பு நிதிக்கு போஷகராகவும், ஜீவிய சந்தாதாரராகவும் நன்கொடையாகவும் உதவினார்கள். இதுபோல் இப்பகுதி மற்றும் நாடார் கனவான்களும் நமததிபரை வரவழைத்து உபசரித்தனுப்புவார்களாக.

பா. சா. சாலமோன் நாடார்.

---

நீர்கொளும்பில் "க்ஷத்திரிய மித்திரன்" பத்திராதிபர் விஜயம்

## வரவேற்பு கூட்டம்.

நீர்கொளும்பு நாடார் கேட்டுக்கொண்டபடி நமது பத்திராதிபரவர்கள் 30-5-23-ல் இங்கு சகாக்களோடும் விஜயம் செய்தார்கள். இரவு 7-மணிக்கு மீட்டிங்கு ஆரம்பிக்கப்படுமென்று நோட்டீஸில் கண்டிருந்ததாயினும் சுமார் 11-மணிக்கு மீட்டிங்கு ஆரம்பமாயிற்று ஸ்ரீமான், செ. ப. உலகநாத நாடாரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். இரத்தினபாண்டிய ரவர்களால் அதிபரைப்பற்றி சபையாருக்கு அறிமுகம் செய்யப்பட்டது. நண்பர் ஜெபமாலை நாடாரால் உபசாரப்பத்திரம் வாசித்துக்கொடுத்ததும் அதிபரவர்கள் உபசாரபத்திரத்திற்கு வந்தன மளிக்கையில் "நமது குலத்தொழில் யாது?" என்ற விஷயமாகவும் இன்னும் பல அறியவிஷயங்களையும் பிரசங்கவாயிலாய் வெகுநேரம்வரை உபந்நியாசித்தார்கள். ஸ்ரீமான், ப. ஞானப்பிரகாச நாடாரவர்களால் அதிபருக்கும் சகாக்களுக்கும் பூமாலை போடப்பட்டது. ஸ்ரீமான், ஆ. சுவாமியடியான் நாடாரவர்கள் இக்கூட்டத்தின் விஷயமாய் நிரம்பவும் சிரமம் எடுத்துக்கொண்டார்கள். பாதுகாப்பு நிதியோடு அதிகமான சந்தாக்களும் சேர்ந்தது.

ஜே. எஸ். நல்லதம்பி நாடார்,
நீர்கொளும்பு.

---

க்ஷத்திரியகுல பாலியரின் மனோகர வாசகசாலையாரால்,
சென்னை தண்டையார்பேட்டை "க்ஷத்திரிய மித்திரன்" பத்திராதிபரும்,
ஆரியகுல க்ஷத்திரிய விளக்கம், நமது குலத்தொழில் யாது?
நாடார் என்னும் சொல்லாராய்ச்சி இவ்வரிய நூல்களின் ஆசிரியருமான
ஸ்ரீமான், த. விஜயதுரைசாமி கிராமணி அவர்களுக்கு வாசித்தளித்த

## உபசாரப் பத்திரம்.

அகதியாய் அஞ்சலென் றடைந்தோரை, அன்பாயாதரிக்கும் அமிர்தகுணம் பொருந்திய, அரிபால்யனென அரசகுலத்தின் அருள்வடிவே, வாழி! வாழி!!

நாடார்குல திலகமாய் நாட்டிற்கோர் நாயகமாய் விளங்கி நாகரீகம் வளர்ந்தோங்குந் தருவே! தாங்கள் இன்று இவண் விஜயம் தந்து எங்கள் வாசகசாலையைச் சிறப்பித்த தாயான குணத்தை தாணியோரறிந்து தங்களைப் போற்றத் தற்பரனை இறைஞ்சுகின்றோம்.

புகழுடம்பெடுத்த புனிதா! நின் திருவாய் முத்தென்ற மொழிகளை நாங்கள் இன்னவரை கேளாதிருந்தும், நின்மதலை மித்திரன் வாயிலாய் நம்தம் அமிர்தமொழிகளை யறிந்தும் தங்களையே இன்று நேரில் தரிசிக்கப் பாக்கியம் பெற்ற யாங்கள் இணையிலாச் சந்துஷ்டி அடை

ந்து எங்கள் வாணுள்களில் நின்விஷயநாளை ஓர் திருநாளாகவே கொண்டாடுவோம்.

திரிமூர்த்திகளில் ஒரு மூர்த்தியாய் விளங்கும் நாடார்குல திரவியமே! நாடார்குல தைரியமே! நாடார்குல ஆநந்தமே! பதின்மூன்று லக்ஷம் ஜனங்களின் தலையே! நின்மகிமை பெருமையை எம் சிற்றறிவால் எவ்விதமியம்புதல் கூடும்.

இகத்தோர்போற்றும் ஜெகத்திலுதித்த இந்தியத்திலகமே! இம்மண்ணுலகில் நின் மாபெரு மகிமை மாசுபடாதிருக்க மாபரனை வேண்டுகின்றோம்.

நாடார்குல மக்களுக்கு நாகரீகம் ஏற்றி வந்த மன்னர்குல மரக்கலமே! நும் தைரியமே எங்களை அரசர்குலமென்றும், நாட்டையாண்ட நாடார்கள் என்றும், க்ஷத்திரியகுலச் சுத்தவீரரென்றும் வாய்கூசாமல் செப்பத் தைரியம் கொடுத்தது. இப்பேருபகாரத்துக்குப் பிரதி செய்ய முடியாமைபற்றி மிகவே வருந்துகின்றோம்.

கல்வியைக் கரைகண்ட கருணாகரா! நின்மதலை மித்திரன் பல்லாண்டு வாழ்ந்து, பார்மிசை எங்கும் பரந்துநின்று பல்லோராலும் போற்றப் படப் பரமன் கிருபை பாலிப்பாராக.

போலிப் புலவரின் புலன்களை அடக்கி பூவுலகெங்கணும் புகழத்துவஜத்தை மகிழ்வொடு நாட்டின புண்ணியா! நின் கண்ணியவருகையானது எம்மிடம் நண்ணியதால், யாங்கள் எண்ணிய கருமமும் திண்ணமாய் முடிய அண்ணலாம் பரமன் தண்ணருள் புரிவாராக.

பாரில் பிரசங்க மாரியைப் பொழியும் பாண்டியதீரா! நின்தீரமே தீரம்.

இத்தரைமீதில் எத்திறத்தோரும் நித்தமும் போற்ற தத்துவம்பெற்ற வித்தகமணியே! அத்தனினருளால் அவனியின்மீதே அநேக காலம் ஆயுளோடிருந்து அருள்மழை பொழிய அமலனை வேண்டுகின்றோம்.

எல்லாம் வல்ல இறைவன் அருள் நினக்கும் நின் மித்திரனுக்கும் நீடிய ஆயுளைக்கொடுத்து நின் காரியா காரியங்களும் கண்ணியமாய் முடியக் கருணைசெய்ய வேண்டி நிற்கும்.

தங்கள் விஜயநாளை ஓர் திருநாளாகக் கொண்டாடி ஆநந்திக்கும் க்ஷத்திரியகுல பாலியரின் மனோகர வாசக சாலையார். (23-4-1923)

---

''க்ஷத்திரிய மித்திரன்'' பத்திராதிபர்

ஸ்ரீமான், த. விஜயதுரைசாமி கிராமணியாரவர்களுக்கு

நீர்கொழும்பு நாடார்கள் வாசித்துக்கொடுத்த

## உபசாரப் பத்திரம்.

---

அன்புமிக்க ஐயா!

தாங்கள் இலங்கைக்கு விஜயமெய்தி ஒவ்வோரிடங்களிலும் நம்மவர்களின் வேண்டுகோட்கிசைந்து ஆங்காங்கு சிரமம் பாராட்டாது விஜயமாகி சிறப்பித்ததுபோல் எங்கள் வேண்டுகோட்கிசைந்து இன்று இங்கு எங்கள் மத்தியில்வந்து எங்களை கௌரவித்த தங்களது பெருங்குணத்திற்காக எங்கள் நன்றி செலுத்துகிறோம்.

குலசூரியனே!

நாடார், சான்றார், கிராமணி, என்னும் நமது குலப்பெயர், பட்டப் பெயர்களின் அருமை தெரியாது அசட்டுத்தனமாகவும், பொறாமை கொண்டு வேண்டுமென்றும், அறியாமலும் அறிவிலாப் புலவர்கள் தப்பிதமாக ஒவ்வோரிடங்களில் இலக்கண விரோதமாய்கூறி தவறுக செய்துள்ள மாசுகளை யெல்லாம் ''க்ஷத்திரிய மித்திரன்'' வாயிலாய் அறவேயகற்றி பொறு

மை, அறியாமை முதலிய நோய்கொண்ட புலவர் குழாங்கட்கிசைந்தவித மருந்தூட்டி குணப்படுத்தியும், இன்னும் நம்குல விஷயமாய் பலர் கொண்டிருக்கும் தப்பபிப் பிராயங்களையும் போக்கி பிரகாசிக்கச் செய்துவரும் தங்கள் பெருமை கொண்டாடத்தக்கதே. "க்ஷத்திரிய மித்திரனும்" அதன் அதிபராகிய தாங்களும் நீடூழிகாலம் வாழ்ந்திருக்க கடவுளை துதிக்கின்றோம்.

தாய்நாடாகிய இந்தியாவைவிட்டு வியாபாரம் பொருட்டாய் வந்துள்ள இடத்தில் தகுந்த விதமாய் தங்களை உபசரிக்க வியலாததுபற்றி வருந்துகின்றோம். இப்பொழுது நாங்கள் செய்துள்ள இச்சிறு உபசாரத்தையும் ஏற்று குற்றங்களிருப்பினும் க்ஷமித்து அங்கீகரிப்பீர்களாக வேண்டுகின்றோம்.

தங்கள் சுகவாழ்வை சதாவிரும்புகிற

(30-5-23) நீர்கொழும்பு நாடார்கள்.

---

## நமது க்ஷத்திரிய மித்திரன் பத்திராதிபர் இலங்கை விஜயம்.

(கொழும்பு, பா. பி. இரத்தின பாண்டியன்.)

---

இந்தியாவிற்கு கிரீடமாய் நின்றிலங்கும் இலங்கையானது இராவணாதியர்களால் இலங்கையென்றும், குபேரநாடென்றும், சிங்கபாகுவால் சிங்களமென்றும், சூரியகுல ஈழராஜனால் ஈழநாடென்றும், தற்காலம் ஆங்கில ஆட்சியில் சிலோன் எனவும் வழங்கப்பட்டுவருகிறது. இத்தேசம் எந்தக் காலத்திலுமே சகல வளப்பங்களும் அமைந்திருந்தே வந்திருக்கின்றது, இவ்வருமையான இலங்கையைக் கண்ணுறக் கருதியிருந்த நமது பத்திராதிபரவர்கள் பார்வையிடும்பொருட்டும் க்ஷத்திரிய மித்திரன் பாதுகாப்புநிதி ஏற்படுத்திவிடவெண்ணியும் ஏற்கனவே இலங்கையிலுள்ள சந்தாதார்களுக்கும் மற்றும் முக்கியஸ்தர்களுக்கும் அச்சிக்கார்டுமூலம் தெரிவித்திருந்தபடி 15-4-1923 ஆதிவாரம் பகல் 10-மணி சுமாருக்கு S. S. Bangala என்னும் கப்பலில் அருப்புக்கோட்டை ஸ்ரீமான், செ. ப. உலகநாத நாடாரவர்களோடும் வந்து கொழும்பு துறைமுகம் இறங்கினார்கள். விஜயன் விஜயம் இலங்கைநாடார்களுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது, ஆங்காங்கே பல இடங்களிலுமிருந்து குலாபிமானிகளான நாடார்கள் அதிபரைப் பார்ப்பதற்கு தினமும் வந்துகொண்டிருந்ததோடு ஒவ்வோர் பகுதியிலுள்ளவர்களும் தங்கள் தங்களிடங்களுக்கு அழைத்து உபசரிக்க வேண்டுமென எண்ணினார்கள், எங்கும் கிளர்ச்சியும் சந்தோஷ ஆரவாரமுமாய் நின்றது முதன்முதலாய் கொழும்புநகரில் "இந்திய க்ஷத்திரியகுல நாடார் சங்கத்தின்" ஆதரவில் ஓர் பொது மீட்டிங்குவைத்து உபசரிக்கயெண்ணி 22-4-23 ஞாயிறுதினம் 27-நெ. குமாரவீதி மெஸர்ஸ் ரூ. மா. & Co.; அவர்கள் கட்டிடத்தில் அருப்புக்கோட்டை ஸ்ரீமான், செ. ப. உலகநாத நாடார் அவர்கள் அக்கிராசனத்தில் மீட்டிங்குநடத்தி உபசரித்ததோடு "க்ஷத்திரிய மித்திரன், பாதுகாப்பு நிதி" வசூலாரம்பத்திற்காக சங்கத்தின் பொதுவில் ரூபாய் 300 கொடுத்து நிதிவசூல் திறந்துவைத்தார்கள், மதிக்கத்தக்கதே. இக்கூட்டத்திற்கு பல இடங்களிலுமிருந்து அதிகமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தார்கள். மறுதினம் 23-4-23-ல் கும்பனித்தெரு "பால்ய நாடார் மனோகர வாசகசாலையார்களின்" அழைப்புக்கிணங்கி அவர்களால் மோட்டாரில் அழைத்துக்கொண்டு போகப்பட்டு அம்மீட்டிங்கிக்கு விஜயமானார்கள். அவ்

வாசகசாலை வாலிபகுழாங்கள் ஒவ்வொருவரும் அபிமானமோடு ஊக்கமும் உற்சாகமுமுடையவர்களாயிருந்து தகுந்தவிதமாய் கூட்டத்தைச் சிறப்புடன் நடத்தி உபசரித்ததோடு "க்ஷத்திரிய மித்திரன், பாதுகாப்பு நிதிக்கும்" உதவியதன்றி அதிகமான புது சந்தாதார்களையும் சேர்த்துக் கொடுத்தனுப்பி வைத்தார்கள். கொழும்புநகர் பிரபல வியாபாரிகளான எல்லா நாடார்களும் அதிபரை தங்கள் தங்களிடங்களுக்கு வரவேற்று உபசரித்தும் ஒவ்வொரு கம்பனி கனவான்களும் "பாதுகாப்பு நிதிக்கு" நூறு நூறாகவும் போஷகர், ஜீவிய சந்தாதார்களாகவும் உதவி உபசரித்தபெருமை வியக்கத்தக்கதே. இதன்பின் அதிபரவர்கள் உள்நாடுகட்கு சுற்றுப்பிரயாணம் ஆரம்பித்தனர். முதலில் (7-5-23-ல்) கொளும்பு வெளிக்கடையிலுள்ள நாடார்கள் வரவேற்றுபசரித்தனுப்பினார்கள். இதற்கிடையில் Ragama ஸ்டேஷனிலிருந்து சுமார் ஒருமைல் தூரத்திலுள்ள மெக்கானிக்கல் இஞ்சினீயர் ஸ்ரீமான், ராஜாதேவவாம் நாடார் அவர்கள் அழைப்புக்கிணங்கி ஸ்ரீமான்களான K. S. மாணிக்கவாசக நாடார் கலியாணசுந்தர நாடார், செ. ப. உ. அவர்களுடன் அங்கு விஜயமாகி அவ்விடத்திலுள்ள அவர்களது கைத்தொழிற்சாலையையும் பார்வையிட்டு சகாக்களோடு விருந்தருந்தி கொளும்புவந்தார்கள். (ஸ்ரீமான், இஞ்சினீயரவர்களையும் அவர்கள் கைத்தொழிற் சாலையைப்பற்றியும் கீழே சிறிது விரித்துரைக்க விரும்பியதால் இங்கு சுருக்கிக் கூறப்பட்டுள்ளது.) டவுன்களில் முக்கியமான இடங்களையும் கண்காட்சி சாலையையும் களனியிலுள்ள விசேஷபுத்தாலய முதலியவைகளையும் பார்வை யிட்டுக்கொண்டு (9-5-23-ல்) காலிநகருக்குப் பிரயாணம் ஆரம்பிக்கப்பட்டது, துணையாக யாமும் ஸ்ரீமான், உலகநாத நாடாரவர்களும் சென்றுள்ளோம். அன்றிரவு காலி (Galle) யில் பிரபல வியாபாரியும் குலாபிமானச் செல்வருமான ஸ்ரீமான், A. E. ஆபிரகாம் நாடாரவர்களால் உபசரித்து விருந்தளிக்கப்பட்டதோடு மறுதினம் 10-5-23 இரவு தங்கதாரோடு 105-கெ. நாடார்கள் கட்டிடத்தில் ஸ்ரீமான் A. E. ஆபிரகாம் நாடாரவர்களின் அவைத் தலைமையின்கீழ் மீட்டிங்கு ஆரம்பித்து சிறப்பாய் நடந்தேறியது ஸ்ரீமான், A. E. ஆபிரகாம் அவர்கள் இதில் அதிபருக்காக வேண்டிய பிரயாசை எடுத்துக்கொண்டதும் மறுதினம் ஜோலிகளையுங் கவனியாது (தான் "க்ஷத்திரிய மித்திரன், பாதுகாப்பு நிதிக்கு" இரக்ஷகராக ரூபாய் நூறு கொடுத்ததோடு) ஒவ்வோரிடத்திற்கும் சிரமம் பாராது சென்று நிதிவசூலித்துக் கொடுத்தார்கள். இவர்களின் குலாபிமானம் போற்றத்தகுந்ததே. அன்று காலிநகரை சுற்றிப்பார்க்க ஆரம்பித்தோம். இலங்கையில் பூர்வீக அரசர்களது தலைநகருள் காலி என்னும் இந்நகர் ஒன்று, நகர்பக்கத்தில் சமுத்திரத்துள் ஓர் மலையிருக்கின்றது, இதனை மருந்து மாமலை என்றும் அனுமார் சஞ்சீவி மலையை எடுத்து வரும்போது உடைந்து விழுந்த ஓர் சிறு பாகமெனவும் கதை கூறுகின்றார்கள். படகு ஏறி அங்குபோய் சுற்றிப்பார்த்து அதன் மறுபக்கம் அடிவாரத்தில் ஸ்ரீ கதிரேசபெருமான் ஆலயம் ஒன்றுளது அதனைப்பார்த்து பெருமானைத் தெரிசித்துத் திரும்பியதோடு, டச்சுக்காரர்கள் ஆட்சிகாலத்திலேற்பட்ட பிரதான கற்கோட்டையின் காட்சியையும் கண்ணுற்று மகிழ்ந்தோம், இந்நகரைச்சுற்றி மூன்றுபாகம் கடலால் சூழப்பட்டிருக்கின்றது, ஒருபுரம் மாத்திரம் காலிநகர் காலியாய்க் கடலால் சூழப்படாமலிருக்கின்றது. காலிநகரை அன்று பார்வையிட்டுக் கொண்டதும் மறுதினம் ஸ்ரீமான், A. E. ஆ. அவர்களே ரெயில்வரை வந்து தமது செலவிலே (2nd class Ticket) ரெயில் டிக்கட்டு சகாக்களுக்குமாக எடுத்துக்கொடுத்து ரெயில் பாலாகும்வரை பிளாட்பாரத்தில் நின்று உபசரித்து (Dodanduwa) என்னும் இடத்திற்கனுப்பிவைத்தார்கள்.

(இன்னும் வரும்.)